# காலை உணவிற்கு சாக்லேட்!




# பானி மிக்ஸ் சாக்லேட்

## சுவையான காலை உணவிற்கு ஒரு வழி.

உங்கள் குழந்தை விரும்பி உண்ணும் பானி மிக்ஸ் சாக்லேட்டை காலை உணவிற்கு கொடுங்கள். இது தானியங்கள், பழங்கள் முந்திரியோடு சாக்லெட்டும் கலந்த பாரிட்ஜ்.




**எளிதில் தயாரிக்கலாம்**

சமைக்கத் தேவையில்லை. ஒரு கிண்ணத்தில் தேவையான அளவு பானி மிக்ஸை போடவும். முன்னமே கொதிக்க வைத்த பாலைச் சேர்க்கவும். மிருதுவான பாரிட்ஜ் கிடைக்க மெதுவாக கலக்கவும்.



**பானி மிக்ஸ்**Ⓣ

உடனடியாக தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்

இரு வகைகளில்:

நாச்சுரல் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/C/1/89/TAM










முதலமைச்சருக்குத் தமது மந்திரிசபையை மாற்றி அமைக்க முழு அதிகாரங்கள் உள்ளன என்பதும் காரணம் கூற அவசியமில்லை என்பதும் உண்மையே. ஆனாலும் காரணம் கூறாமல் அடிக்கடி நடக்கும் மாற்றங்களால் மக்களிடையே பலவித பேச்சுக்கள் அடிபடும் என்பதையும் மறுப்பதற்கில்லை.

முன் அனுபவம் இல்லாத ஜெயக்குமாரிடம், வனவளம், பால்வளம், மீன்வளம் என்று ஏகப்பட்ட இலாக்காக்களைக் கொடுத்திருந்தார். விசுவாசத்துக்குக் கிடைத்த பரிசு என்று கட்சிக்காரர்கள் நினைத்தனர். ஆனால் இப்போது மற்ற 'வளங்'களை ஜெ. பார்த்துக் கொண்ட நிலையில் வெறும் மீன் வளத்தோடு இருக்கிறார் ஜெயக்குமார். 'இவருக்கு ஏகப்பட்ட இலாக்காக்கள் கொடுத்ததேன்' என்று ஆச்சர்யப்பட்டவர்கள், இன்று 'பறிக்கப்பட்டதேன்?' என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

செல்வ கணபதியிடம் குடிநீர், கழிவு நீர் வாரியம் இருந்தது. போன் மூலம் பெரிய இடத்திலிருந்து வந்த ஒரு சிபாரிசை உடனே ஏற்காமல் ''முதல்வரிடம் கேட்டுச் செய்கிறேன்'',

# அமைச்சரவையில் அதிரடி மாற்றங்கள்

அதிரடி மாற்றங்கள்
அதிரடி மாற்றங்கள்
அதிரடி மாற்றங்கள்
அதிரடி மாற்றங்கள்

என்று பதில் சொன்னார். முதல்வரை ஆளும் சக்தியினால் பலிவாங்கப்பட்டார். மறுநாள் அந்த இலாக்கா அவரிடமிருந்து மாற்றப்பட்டது.

அமைச்சர் ராஜாராம் நீக்கம் குறித்து ஐந்து விதமான காரணங்கள் சொல்லப்படுகின்றன.

ஆசிப் துவக்கத்திலிருந்தே கட்சிக்காரர்களுடன் ஒட்டாமல் தாமரை இலைத் தண்ணீர் போன்று இருந்தார். ஜெ.வின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும் ஒரு மந்திரியின் சிபாரிசைத் தட்டிக் கழித்ததால் ஆசிப் ''போட்டுக்'' கொடுக்கப்பட்டார் என்கிறது



❑ தில்லி வியாபாரி ரோமேஷ் ஷர்மா கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றிருப்பது அவரது நகங்களின் நீளத்துக்காக. இவரது ஐந்து இடது கைவிரல் நகங்களின் மொத்த நீளம் 430 செ.மீ. நடுவிரல் நகம் மட்டுமே 112.5 செ.மீ.!

- கணேஷ்

கோட்டைத் தகவல்.

தமிழ் வளர்ச்சி இலாக்கா ஆர்.எம். வீயிடம் இருந்து பறிக்கப்பட்ட போதே அவருக்குத் தலைவலி ஆரம்பமாகிவிட்டது என்பது கட்சிக்காரர்களுக்குப் புரிந்து விட்டது. ஒரு மைனாரிடி கல்லூரி பிரச்னையைச் சரியாகப் புரிந்து கொண்டு செயல்படாததால் ஆர்.எம்.வீக்கு இந்த கதி என்கிறார்கள் கட்சிக்காரர்கள். ''மைனாரிட்டி கல்வி நிறுவனங்களைப் பற்றி ஆர்.எம்.வீ தெரிவித்த கருத்துக்களால், புண்பட்டுப் போன கிறிஸ்துவ சமுதாயத்தைத் தாஜா செய்யவே ஆர்.எம்.வீயிடமிருந்து கல்வி இலாக்கா கழட்டிவிடப்பட்டது'' என்று சொன்னார், ஓர் அதிகாரி.

இதுவரை செய்யப்பட்ட இலாக்கா மாறுதல்கள், மந்திரிகள், நீக்கம் போன்றவற்றிலிருந்து ஒரு விஷயத்தைக் கணிக்க முடிகிறது. ஜெ.வுக்கு மிகவும் விசுவாசமாக உள்ள செங்கோட்டையன், அழகு. திருநாவுக்கரசு எஸ்.டி.எஸ். போன்றவர்களுக்குக் கூடுதல் இலாக்காக்கள் கிடைத்திருக்கின்றன. ஜானகி ஆதரவாளராக இருந்த ராசாராம் நீக்கப்பட்டது மட்டுமல்லாமல், மற்ற ஆதரவாளர்களான வீரப்பன், முத்துசாமி போன்றோர் இலாக்காக்களை இழந்திருக்கிறார்கள். புதுக்கோட்டையைச் சேர்ந்த தமது தீவிர ஆதரவாளரான ரகுபதியை அமைச்சராக நியமித்ததன் மூலம் அங்கே ஆர்.எம்.வீக்கு எதிராக ஒரு ஆளைத் தயார் செய்திருக்கிறார் ஜெ.

இதற்கிடையில் இந்திர குமாரியின் பதவிக்கு ஆபத்து வந்து கொண்டிருப்பதாக ஒரு தகவல்.

''ஏறும் விலைவாசி, மகாமகத்தில் முதல்வருக்கு ஏற்பட்ட அவப்பெயர், என்று மக்களிடையே பரவலாக இருக்கும் பேச்சை திசைதிருப்பவே இந்த மாற்றங்கள்'' என்கிறார் தி.மு.க. எம்.எல்.ஏ. பரிதி இளம்வழுதி.

நீக்கப்பட்ட மந்திரிகளும், இலாக்கா கழட்டிவிடப்பட்ட மந்திரிகளும் மௌன விரதம் அனுஷ்டிப்பது புரிந்து கொள்ளக் கூடிய ஒன்றுதான். ''கொடுத்தவரே பறித்துக் கொண்டார்'' என்று அவர்கள் சமாதானப்பட்டுக் கொண்டாலும், மௌன விரதத்தின் மூலம் ஜெ.யின் அபிமானத்தை மீண்டும் பெற்று மந்திரியாக மாட்டோமா என்ற நப்பாசையும் ஒரு காரணம்.

பல ஜூனியர் மந்திரிகள் ஜெ.யின் உருவத்தைக் கையில் பச்சை குத்திக் கொண்டு காட்சியளிப்பதைப் பார்க்கும் போது, எல்லோருக்குமே ஒரு பயம் இருப்பது புரிகிறது. 'நித்திய கண்டம்; அல்ப ஆயுஸாக' மந்திரிகள் நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தால், அரசு செயல்பாடுகள் ஆட்டம் காணுவது மட்டுமல்லாமல், அதிகாரிகளும் அமைச்சர்களை மதிக்காத நிலை ஏற்படும்.

- ப்ரியன்

# சின்னத் திரையில் சில உண்மைக் கதைகள்

“போராட்டம்” என்று பொருள் தரும் சொல் 'சங்கர்ஷ்'. கஸ்டம்ஸ் அதிகாரிகள் தங்கள் பணியைச் செய்யும் போது எத்தனை விதமான போராட்டங்களைச் சந்திக்க வேண்டியுள்ளது. அவற்றை எப்படிச் சமாளித்து தேசத் துரோகக் கும்பல்களை, கடத்தல்காரர்களைப் பிடிக்கிறார்கள் என்று அழகாய், விறுவிறுப்பாய் எடுத்துக் கூறுகிறது 'சங்கர்ஷ்' டெலிவிஷன் தொடர்.

சுங்க இலாக்காவின் கோப்புகளிலிருந்து சேகரிக்கப்பட்ட உண்மைக் கதைகளின் அடிப்படையில் இத் தொடரைத் தயாரித்துள்ளவர்கள் : குட்டிபத்மினியும், விஜய் பிரதாப்பும்.

''இப்படி ஒரு தொடர் எடுக்கும் எண்ணம் 88ம் வருடம் எனக்கு ஏற்பட்டது. நிதி அமைச்சகத்தின் வருவாய்த் துறையினருடன் தொடர்பு கொண்டு, என் விருப்பத்தைத் தெரிவித்தேன். ''சுங்கம் மற்றும் கலால் வரித் துறை பற்றி ஒரு நிமிடப் படம் எடுத்துக் கொடுங்கள். அது போதும்'' என்றார்கள். ''நான் இருபது நிமிடப் படம் தயாரித்துத் தருகிறேன். அதைப் பார்த்து விட்டு அபிப்ராயம் சொல்லுங்கள்'' என்றேன். பல ஊர்களுக்குப் போய் உண்மைக் கதைகளைச் சேகரித்தேன். சுமார் 160 கதைகள் கிடைத்தன. அவற்றை வடிகட்டி, வடிகட்டி 25 கதைகளைத் தேர்ந்தெடுத்து, அதில் ஒன்றை முன்னோட்ட நிகழ்ச்சியாய்த் தயாரித்து, வருவாய் துறையினருக்குப் போட்டுக் காட்டினேன். அவர்களுக்குப் பரம திருப்தி. அடுத்து நான் தூர்தர்ஷனை அணுக, ரெவின்யூ துறையும் என் நிகழ்ச்சியைப் பற்றி எடுத்துச் சொல்ல, 'சங்கர்ஷ்' ஓ.கே. ஆயிற்று'' என்கிறார் குட்டி பத்மினி.

இத் தொடரில் நடித்திருப்பவர்களில் பெரும்பாலானவர்கள் தென்னிந்தியர்கள் தான். வைஷ்ணவி, அமலா, நாஸர், ஹீரா ராஜகோபால், பாண்டு, கிட்டி உள்படபலர். ஃபிலிம் இன்ஸ்டிடியூட் ஆசிரியரான சக்ரவர்த்தி, குட்டி பத்மினியின் சகோதரர். இவர் சில கதைகளை இயக்கியுள்ளார். தவிர, சக்ரவர்த்தியின் ஆலோசனையின் பேரில், திறமையான ஃபிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர்கள் சிலரைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொருவரும் ஓரிரு கதை

◄ சங்கர்ஷ்... சில காட்சிகள்.





◄ சங்கர்ஷில் வைஷ்ணவி - குட்டி பத்மினி



களை இயக்க வாய்ப்புத் தந்திருக்கிறார்கள். அதே போல இசையமைக்க ஐந்து மாண வர்களுக்கும் கேமராவைக் கையாள நான்கு மாணவர்களுக்கும் வாய்ப்புக் கிடைத்துள் ளது.

''வடக்கே தயாரிக்கப்படும் தொடர் களுக்கு,' சற்றும் தரத்தில் குறைந்ததில்லை தெற்கே தயாரிக்கப்படும் தொடர்கள் என்று நிரூபிக்க வேண்டும் என்பதுதான் என் லட் சியம். அதனால்தான் ஒவ்வொரு கதைக்கும் நாங்கள் எட்டு நாட்கள் ஒதுக்கி, செலவைப் பார்க்காமல் தயாரிக்கிறோம்'' என்கிறார் விஜய் பிரதாப்.

இந்த டீ.வி. சீரியலுக்கென்றே பாங் காக், ஹாங்காங், சிங்கப்பூர் இங்கெல்லாம் போய்ப் படப்பிடிப்பு நடத்தியிருக்கிறார் குட்டி பத்மினி. இந்தியாவிலும் சென்னை, பம்பாய், டெல்லி, கல்கத்தா என்று படப் பிடிப்புக் குழு அலைந்திருக்கிறது. போர்ட் பிளேருக்குக் கூடப் போய் ஷூட்டிங் நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள்.

''ஒரு கதையில் ஆறு குரங்குகள் நடித்திருக்கின்றன. அவற்றை வைத்துக் கொண்டு நாங்கள் பட்ட பாடு... அப் பப்பா! ஒரு குரங்கு தனியே ஓடிப் போய் விட்டது. வெகு நேரம் கழித்துத் திரும்பி வந்த அதை, குரங்கு பயிற்சியாளர் பிடிக்க முயன்ற போது, மறுபடி ஓடிப் போய் விட்டது. கடைசி வரை டிமிக்கி கொடுத்துக் கொண்டிருந்த அந்தக் குரங்கு இறுதி நாளன்று மற்ற குரங்குகளுடன் ஊருக்குப் புறப்பட்ட போது, தானாக வந்து சேர்ந்து கொண்டது!

''ஒரு பாலத்தின் மேலிருந்து படம் பிடித்துக் கொண்டிருந்த கேமராமேனும், அவரது உதவியாளரும் தண்ணீரில் விழுந்து விட, அவர்களை மீட்டது ஆண்டவன் அருள்தான். நான் தோணியில் போவது போன்ற காட்சியின் போது, தவறி தண்ணீ ரில் விழுந்து விட்டேன்...'' எனப் பல அநு பவங்களைச் சொல்கிறார் குட்டிபத்மினி.

இந்தத் தொடருக்குப் பயனுள்ள ஆலோசனைகள் வழங்கியவர்கள் என சென்னை கஸ்டம்ஸ் உயர் அதிகாரிகளான கோபிநாத், தேவ் இருவரையும் குறிப்பிடு கிறார், துணை கஸ்டம்ஸ் கலெக்டரான ருக்மணி சர்மா - அதுதான் கு. பத்மினி ஏற்று நடிக்கும் கதாபாத்திரம்!

சந்திப்பு : மௌலி

## பொன்விழா ஆண்டு : : தங்க நகை பரிசுத் திட்டம் - 17




## ஏமாறாதே...

ஊரிலுள்ள பெரிய மனிதர்கள் பெயர் களிலெல்லாம் லெட்டர் ஹெட் அச்சடித்து வைத்துக் கொண்டு, அவற்றில், ''கடிதம் கொண்டு வரும் நபருக்கு உதவவும்'' என்று ஏதேனும் ஒரு காரணம் கூறிச் சிபாரிசுக் கடிதம் எழுதித் தாமே கையெழுத்திட்டு, பலரிடம் சென்று பணம் பறித்திருக்கிறார் ஒரு கில்லாடி! (26.2.92 நாளிதழ் செய்தி.) இப்படி நீங்களோ அல்லது உங்கள் உற வினரோ, நண்பரோ ஏமாந்ததுண்டா? சுருக்க மாகத் தபால் கார்டில் எழுதினால் அது பிறருக்கும் எச்சரிக்கையாக அமையுமே? ''ஏமாறாதே'' என்று தலைப்பிட்டு, ''கல்கி காரியாலயம், சென்னை - 600 032'' என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுதி அனுப்பக் கடைசித் தேதி, மார்ச், 16, 1992. மிகச் சிறந்த ஏமாற்று வித்தை பிறருக்கு மிக முக்கியமான எச்சரிக்கையாக விளங்கும் என்பதால் அத்தகைய அநுபவத்துக்கு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறு மானமுள்ள தங்க நகைப் பரிசு. பிரசுரமாகும் இதர துணுக்குகளுக்குச் சன்மானம் உண்டு.



கல்கி

பாலு ஜுவல்லர்ஸ்


21
AVAIL 21% INTEREST FOR FIXED DEPOSITS FROM –

## ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஸ்வாமிகளின் ஆராதனை விழா
## திருப்பூந்துருத்தி - 613 103 (தஞ்சாவூர் மாவட்டம்)

திருப்பூந்துருத்தி ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஸ்வாமிகளின் ஆராதனை தரங்க இசைவிழா இவ்வாண்டு 10.03.92 செவ்வாய்க்கிழமை முதல் 12.03.92 வியாழக்கிழமை முடிய சத்குருவின் ஆஸ்ரமத்தில் சிறப்பாக நடைபெற விருக்கிறது. தஞ்சை மாவட்ட ஆட்சி தலைவர் திரு. K. T. ஷண்முக ராஜேஸ்வரன், இ.ஆ.ப. அவர்கள் முன்னிலையில், டாக்டர் பத்மா சுப்ரமணியம் அவர்கள் தலைமை தாங்க, பத்மஸ்ரீ டாக்டர் K. J. யேசுதாஸ் அவர்கள் விழாவை துவக்கி வைக்கிறார். திருமதி. ப்ரபா யேசுதாஸ் அவர்கள் "குத்து விளக்கு" ஏற்றி வைக்கிறார். சிறப்பு விருந்தினராக நல்லி டாக்டர் குப்புசாமி செட்டி பங்கு கொள்ள இருக்கிறார்கள்.

11.03.92 தொழிலதிபர் தஞ்சை திரு. A. சுப்ரமண்ய செட்டியார் அவர்கள் தலைமை தாங்கவும், சென்னை தொழிலதிபரும், கிருஷ்ணகான சபாவின் தலைவருமான திரு. B.V.S.S. மணி அவர்கள் சிறப்பு விருந்தினராகவும், 12.03.92 திருச்சி வானொலியின் நிலைய இயக்குநரான திரு. B.R. குமார் தலைமை தாங்கவும், கும்பகோணம் (City Union Bank Chairman & Managing Director) திரு. V. நாராயணன் அவர்கள் சிறப்பு விருந்தினராகவும், மற்றும் திரு. V. நடராஜன், Divisional Railway Manager/S.Rly/Madras, தரங்க வித்யா சாலை மாணவ, மாணவிகளுக்கு பரிசுகளை வழங்கவும் இருக்கிறார்கள்.

மூன்று நாட்களும் தரங்க இசை விழாவில் கீழ்க்கண்ட பிரபல இசை கலைஞர்கள் பங்கேற்று விழாவை சிறப்பிக்க இருக்கிறார்கள். சங்கீத கலாநிதி தஞ்சை திரு. T.M. தியாகராஜன், திரு. B.V. ராமன், திரு. B.V. லக்ஷ்மணன், பத்மஸ்ரீ டாக்டர் K.J. யேசுதாஸ், இசை பேரறிஞர் குன்னக்குடி திரு. R. வைத்யநாதன், பொறக்குடி திரு. P.V. கணேசய்யர், Dr. திரு. S.R. ஜானகிராமன், திரு. T.K. கோவிந்தராவ், திருவெண்காடு திரு. ஜெயராமன், திருமதி பிரேமா ஹரிஹரன், திருமதி நாகமணி ஸ்ரீநாத், திருமதி சீதா ராஜன், தஞ்சை திருமதி பிரேமா, திருமதி மீரா சேஷாத்ரி, திருமதி சுதா ரகுநாதன், வயலின் கலைஞர்களாகிய திரு. M.S. அனந்தராமன், திருவள்ளூர் திரு. பார்த்தசாரதி, திரு. N.V. சுப்ரமண்யம், திரு. T.K.V. ராமானுஜாசார்யலு, மிருதங்க கலைஞர் டாக்டர் T.K. மூர்த்தி, நாதஸ்வர கலைஞர்களாகிய திருவிழா திரு. ஜெயசங்கர், இசை பேரறிஞர் வலையபட்டி திரு. A.R. சுப்ரமண்யம், திருச்சி S. காசிம், ஹரிகதா வித்வாம்சினி திருமதி T.R. கமலா மூர்த்தி, மற்றும் பல இசைக் கலைஞர்களும் பங்கேற்க இருக்கிறார்கள்.

விழாவிற்கான ஏற்பாடுகளை காரியதரிசி திருப்பூந்துருத்தி திரு. V. வெங்கடேசன், உபதலைவர் திரு. ப்ரதாப்சிங் காடேராவ், ஆகியோர் கவனித்து வருகிறார்கள். பக்தகோடிகள் ஆராதனை விழாவிற்கு தாராளமாக கீழ்க்கண்ட முகவரிக்கு பொருளுதவி செய்து பங்கு கொள்ள வேண்டுகிறோம்.

திரு. L. பாலசுப்ரமண்யம்,

பொருளாளர், 1090, பாபண்ணா சந்து, தஞ்சாவூர் - 613 009.

இங்ஙனம்,

**ஸ்ரீ நாராயணதீர்த்த ஸ்வாமிகள் ஆராதனை மஹோத்ஸவ கமிட்டியார், திருப்பூந்துருத்தி.**

SPONSORED BY : BIPIN SHARMA 79, Pantheon Road, Madras - 600 008.




யூகோஸ்லாவிய யுத்தம் :


வெள்ளோடி

யூகோஸ்லாவியாவில் உள்நாட்டுப் போருக்கு எதிர்ப்பு!

# அமைதிப்படைக்கு இந்தியத் தலைமை!

இந்திய படைத் தளபதி ஒருவரை, அமைதி காக்கும் படைக்குத் தலைவராக, யூகோஸ்லாவியாவுக்கு அனுப்ப முடிவு செய்திருக்கிறது ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபை. இது பற்றி, முன்னாள் தூதுவரும் வெளியுறவுத்துறை அதிகாரியாகப் பணியாற்றியவருமான எம். ஏ. வெள்ளோடியிடம் கேட்டோம் :

''சாதாரணமாக, ஐக்கிய நாடுகள் சபை, தானாக முன் வந்து இப்படி ஓர் அமைதிப்படையை அனுப்பாது. மோதிக் கொள்ளும் இரண்டு நாடுகளும் இதற்கு ஒப்புக் கொள்ளும் பட்சத்தில் மட்டுமே அமைதி காக்கும் படை அனுப்பி வைக்கப்படும். ஆனால் வெளிப்படையாக இதை இரு நாடுகளும் சொல்லாது; கெளரவம் பார்க்கும்!

''சில மாதங்களாகவே யூகோஸ்லாவிய ஃபெடரல் அரசும் குரோயேஷியாவும் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றன. ஆக்ரோஷமான மோதல்தான். சென்ற ஜூன் மாதக் கடைசியில் குரோயேஷியா சுதந்திரப் பிரகடனம் செய்ததிலிருந்து மட்டும், சுமார் எட்டாயிரம் பேருக்கு மேல் உயிர் இழந்திருக்கிறார்கள். இப்போது என்னடா என்றால், இரண்டு பேருமே எப்படியாவது சண்டை நின்றால் போதும் என்று நினைக்கிறார்கள். அதனால்தான் பாதுகாப்புச் சபைத் தலைவர் பொட்ரோஸ் காலி, ஒரு முழு அமைதி காப்புப் படையை அனுப்பலாம் என்ற பாதுகாப்புச் சபை உறுப்பினர்களின் கருத்துக்கு ஒப்புதல் அளித்திருக்கிறார்.

''சில மாதங்கள் முன்பு, ஐரோப்பிய சமுதாயக் கண்காணிப்புக் குழுவின் பிரதிநிதியாக, பிரிட்டிஷ் வெளியுறவுத் துறைச் செயலராக இருந்த லார்ட் காரிங்டன் நியமிக்கப்பட்டிருந்தார். ஆனால் அந்தக் குழு உறுப்பினர்களே கூட, இது போதாது என்று கருதினார்கள். எனவேதான் இந்த அமைதிகாக்கும் படை.

''இதில் சுமார் 13000 பேருக்கு மேல் இருப்பார்கள். முப்பது நாடுகளிலிருந்தும்

## அடுத்த இதழில்...

●● அர்ஜுனா விருது பெற்ற டி. டி. சாம்ப்



- சிறப்புக் கட்டுரை


படை வீரர்கள் அனுப்பப்படுவார்கள். வருடத்துக்குச் சுமார் அறுநூறு மிலியன் டாலர்கள் இதற்காகச் செலவாகும் என்கிறார்கள்.

''இந்த அமைதிப் படைக்கு எப்படி இந்திய ஜெனரல் ஒருவரைத் தலைமை ஏற்க அழைத்தார்கள் என்று கேட்கலாம். ருஷ்யாவில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் காரணமாக இப்போதைக்கு ஐக்கிய நாடுகள் சபை ஓரளவு பலமிழந்த நிலையில் இருக்கிறது. அதே சமயம், பலம் வாய்ந்த உறுப்பு நாடு ஆன அமெரிக்கா, இந்தியத் தலைமைதான் இந்த அமைதிப் பணிக்கு இருக்க வேண்டும் என்று சொல்லுவது ஒரு முக்கிய காரணம்.

''இன்னொன்று, நமக்கு இது போன்ற அமைதிப்படை அநுபவம் நிறைய இருக்கிறது. சைப்ரஸில் அமைதிப் படைக்கு நமது ஜெனரல் திம்மையாதான் தலைவராகப் பல ஆண்டுகள் இருந்தார். காங்கோவில் கூட இந்திய ஜெனரல்தான் இருந்தார். நம்மிடம் திறமை மிகுந்த ராணுவம் இருக்கிறது. தவிர, வல்லரசுகளைச் சார்ந்திராத மூன்றாம் உலக நாடுகளைச் சேர்ந்த படைத் தளபதிகளையே பெரும்பாலும் இது போன்ற அமைதிப் படைக்குத் தலைமை ஏற்கச் சொல்வார்கள். பாதுகாப்பு அமைச்சகத்தைக் கலந்தாலோசித்துதான் இத் தலைவர் நியமிக்கப்படுவார்.

''இது எத்தனை வருடம் அங்கே பணியாற்ற வேண்டி வரும் என்று சொல்ல இயலாது. அமைதி திரும்புகிற வரை இருக்க வேண்டியதுதான். கம்போடியா, லெபனான், சைப்ரஸ் போல அதிக வருடங்கள் இருக்க வேண்டியும் வரலாம்.

- சித்தார்த்

## சார்மினார் சாலை :

★ கிழக்குக் கோதாவரி நெல் அதிகம் உற்பத்தியாகும் பகுதி. அம்மக்கள் பாலை விட சாராயத்தைத்தான் அதிகம் குடிக்கிறார்கள். வருஷத்திற்கு 86 லட்ச லிட்டர் சாராயம் குடிக்கிறார்கள்! பால் : 50 லட்ச லிட்டர் மட்டுமே.

## இருதலைக் கொள்ளி எறும்புகள்!

★ அரசு அதிகாரிகளைக் கடத்திக் கொண்டு போய்த் தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்வது நக்சலைட்டுகளின் செயல் முறைகளில் ஒன்று. இவ்வகையில் கடத்திச் செல்லப்பட்ட ஒரு காங்கிரஸ் மண்டல பிரஜா தலைவர் கொல்லப்பட்டார். முன்பு தெலுங்கு தேசத்தைச் சார்ந்த மண்டல பிரஜா தலைவர் ஒருவர் கொல்லப்பட்டிருக்கிறார். இதன்பின் சுமார் 2000 ம. பி. தலைவர்கள் பதவியை ராஜினாமா செய்ய முன்வந்துள்ளார்கள். 'கிராமங்களில் நக்சலைட்டுகளை ஒடுக்கும் பணிகளில் ஈடுபடும் போலீஸ் சம்பந்தப்படாத இளைஞர்களையும் துன்புறுத்துகிறது. இதைத் தடுக்க வேண்டும் என்கிற கிராமத்தினரின் கோரிக்கைகளை ம.பி. தலைவர்களால் நிறைவேற்ற முடியவில்லை. இன்னொருபுறம் நக்சலைட்டுகளின் மிரட்டல். ராஜினாமாவே சிறந்தது என்று முடிவெடுத்திருக்கிறார்கள். இருதலைக் கொள்ளி எறும்புகள்....



# கிழக்குக் கோதாவரியில் பெருக்கெடுக்கும் சாராயம்!

## மூட்டுக்கட்டை போட்ட மஜ்லிஸ்!

★ ஹைதராபாத் 400 வயது கொண்டாட்டம் தள்ளிக் கொண்டே போகிறது. 1990 இல் நடைபெற வேண்டிய அரசின் கொண்டாட்டம் வெள்ள அழிவால் நின்றது. பின்னர் மோசமான மதக் கலவரத்தால். சென்ற மாதம் பிரதமர் துவக்கி வைப்பதாக இருந்தது. கடைசி நேரத்தில் ரத்து. மஜ்லிஸ் கட்சி நகரில் செல்வாக்கு பெற்றது. அதன் எம்.பி., பிரதமர் விழா துவக்கும் நாளை உள்ளூர் பந்தாக அனுஷ்டிப்பதாய் அறிவித்தது முக்கிய காரணம். நகரின் சுகாதாரம் சீர் கெட்டு வரும்போது இந்தக் கொண்டாட்டங்களுக்கு 200 கோடி ரூபாய் செலவு தேவைதானா? என்று கேட்கிறது மஜ்லிஸ் கட்சி.

- அப்பன்



❑ கடை மூடப்போகிற சமயம். ஒரு பெண் வந்தாள். அந்தச் சமயம் பார்த்து ஒரு திருடனும் அந்தக் கடையில் தன் கைவரிசையைக் காட்ட எண்ணினான். பெண் திடீரென்று 'ஐயோ!' என்று கூச்சலிட்டாள். திருடன் ஓட்டம் பிடித்தான். சிலர் அவனைத் துரத்திப் பிடித்தனர்.

கடைக்காரர் சொன்னார் : "நல்ல வேளையாக நீ கத்தினாய். இல்லாவிட்டால் என் கடையிலே திருட்டுப் போயிருக்கும்! அதிருக்கட்டும், அவன் திருடன் என்று எப்படி கண்டுபிடித்துக் கத்தினாய்?".

"அவனைக் கண்டா நான் கத்தினேன்? நீங்க சொன்ன விலையைக் கேட்டல்லவா கத்தினேன்!" என்றாள் பெண்!

- "ஜோக்ஸ்" நூலிலிருந்து
- ஆர். மகாதேவன்

# ஜிகுஜிகு ரயிலும் திகுதிகு நெஞ்சமும்!

இந்த இதழ் நேயர்களின் கரங்களை அடைவதற்கு முன் நாடாளுமன்றத்தில் பொது பட்ஜெட் தாக்கல் செய்யப் பட்டிருக்கும். ரயில்வே பட்ஜெட்டை ஒரு முன்னுதாரணமாகக் கொள்ளலாம் எனில் பொது பட்ஜெட் பேரிடியாக மக்கள் தலையில் விழும் என்று எதிர்பார்க்கலாம்.

ரயில்வே பட்ஜெட்டில் எல்லா கட்டணங்களும் உயர்த்தப் பட்டுள்ளன. எதிர்பார்த்ததை விடக் குறைவு என்பது ஓர் ஆறுதல் ஆகாது. சரக்குக் கட்டணங்களில் சீனி, வெல்லம், அரிசி, பருப்பு போன்றவற்றுக்கு விலக்கு அளிக்கப்பட்டிருப்பதிலும் ஆதாயம் இல்லை. பொதுவாக எல்லா விலைவாசிகளும் உயரும் போது உணவுப் பொருள்களின் விலை மட்டும் நிலையாக இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது என்பது ஒருபுறமிருக்க, மக்கள் வாழ்வது சாப்பிடுவதற்காக மட்டும் அல்ல. அவர்களுக்குத் தேவைப்படும் மற்ற பல பொருள்களின் விலை சரக்குக் கட்டண உயர்வால் அதிகரிக்க, மக்கள் சொல்லி முடியாத அவதிக்கு உள்ளாவார்கள்.

பயணிகள் கட்டணத்தில் பத்து கிலோ மீட்டர் வரை உயர்வு கிடையாது என்ற அறிவிப்பு ஒரு கொடூரமான ஜோக் ஆகும். எந்த மனிதனும் பத்து கி. மீட்டருக்காக ரயில் ஏறுவது கிடையாது. மேலும் சீசன் டிக்கெட் விலை உயர்வால் புறநகர் வாசிகள் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

முதல் வகுப்பு ஏசி வகுப்பு முதலியவற்றுக்குத்தான் அதிக மாகக் கட்டண உயர்வு என்று கூறுவது சோஷலிஸ சித்தாந்த அடிப்படையில் சரியாகத் தோன்றலாம். ஆனால் இதிலும் யதார்த்த நோக்கு இல்லை. காரணம், தனி மனிதர்கள் சொந்தச் செலவில் ஏஸி அல்லது முதல் வகுப்பில் ஏறுவதில்லை. இந்த உயர் வகுப்புகளில் பயணம் செய்வோர் அரசு உயர் அதிகாரிகள் அல்லது கம்பெனிகளில் உயர் பதவி வகிப்பவர்கள் ஆகியோரே. இவர்கள் செலவுக் கணக்கு எழுத, அந்த நிறுவனம் உற்பத்தி செய்யும் பண்டங்களின் விலை உயர்வில்தான் அது பிரதிபலிக்கும். கடைசியில் பாதிக்கப்படுவது பண்டங்களை வாங்கும் சராசரி குடிமகனே. அதே போல் அரசுச் செலவில் அதிகாரிகள் ஏசி வகுப்பில் செல்ல, செலவை ஏற்பவன் வரி செலுத்தும் சாமானியனே. அவனுக்கு வரிச் சுமை கூடும்.

சரக்குக் கட்டண உயர்வால் நிலக்கரிப் போக்குவரத்துக்கான செலவு கூட, மின் உற்பத்திச் செலவும் மின்கட்டணமும் உயரும் என்று கருதப்படுகிறது. மின் உற்பத்திச் செலவு அதிகரித்தால் தொடர் விளைவாக எல்லாப் பண்டங்களின் உற்பத்திச் செலவும் அதிகரிக்கத்தானே செய்யும்?

பட்ஜெட்டில் விவரிக்கப்பட்டுள்ள சில அபிவிருத்தித் திட்டங்களில் தமிழகம் மகிழ்ச்சி அடையும்படியாக ஏதொன்றும் காணோம் என்பது நமக்குக் கூடுதலாக ஏமாற்றம் அளிப்பதாகும்.

சென்ற ஆண்டு பட்ஜெட்டிலேயே எதிர்பார்த்ததற்கும் அதிகமாகக் கையிருப்புத் தொகை உள்ள போது புதிய பட்ஜெட்டில் கட்டணங்களைக் குறைத்துச் சலுகை காட்டுவதற்குப் பதில் அபரிமிதமாக உயர்த்தி இருப்பதுதான் ரயில்வே மந்திரியின் அபார சாதனை!

நமக்கு மிஞ்சுவது வேதனை.





கல்கி
50
1992
மார்ச் 8
மலர் : 50
இதழ் : 32
பிரஜோத்பத்தி
மாசி 25



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# “ஊரு கெட்டுப் போனதுக்கு மூர்மார்கெட் அடையாளம்!”

## இரட்டை விளம்பரம்!

◆ ''விளம்பரமில்லாமல் ஒரு சலுகை'' என்ற தலைப்பில் கல்கி பிப்ரவரி 23 ம் தேதி இதழில் வெளியான துணுக்கில் 'அறுபது வயதுக்கு மேற்பட்ட முதியவர்கள்' என்று உள்ளது. ''அறுபத்து ஐந்து வயதுக்கு மேற்பட்டவர்கள்'' என்று திருத்திப் படிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். பாலகிருஷ்ணனுடைய குறிப்பு கல்கியில் வந்தது, அதை நான் திருத்த முற்பட்டது ஆக இரண்டும் நல்ல விளம்பரமாக அமைந்தது, ரயில்வே இலாகாவிற்கு!

ஐதராபாத், பி.என். மீனாக்ஷிசுந்தரம்.

## குறள் வரிகள்!

◆ 'பிரச்னை அலைகளில் காஷ்மீர் படகு' தலையங்கத்தில் கடைசி ஒன்றரை வரிகளில் திருக்குறளின் உபதேசம் பளிச்சென மின்னுகிறது! சம்பந்தப்பட்டவர்கள் சற்றே செவிசாய்ப்பின் படகுப்பயணம் சொகுசாக அமைந்திடுமே!

சென்னை - 30, புளியரை கணேசன்.

## அழகுடன் உபயோகம்

◆ கலைப் பொருட்களைப் பற்றி மிகவும் விரிவாகவும், அழகாகவும் சொன்னதோடு, அவற்றைக் கொண்டு அழகு படுத்துவது எப்படி, என்பதையும் சொன்னது உபயோகமாய் இருந்தது.

சென்னை - 83, ஆர். ராஜேஷ்குமார்.

## பெண்களுக்கு ஆறுதல்

◆ ''வேலைக்குச் செல்லும் மனைவி, சம்பாத்தியத்தின் மூலம் குடும்பத்தில் சரிபாதி பங்கெடுத்துக் கொள்கிறாள். ஆனால் கணவனோ தனக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளில் மட்டும் எல்லாமே மனைவிதான் செய்ய வேண்டும் என எதிர்பார்க்கிறான் என்ற கருத்தை 'வீட்டு வேலை' சிறுகதை மூலம் தெளிவுபடுத்தி விட்டார் அன்னம். வேலைக்குச் செல்லும் பெண்களின் ஆறுதலுக்குரிய கதை!''

மதுரை - 16, வி. பரமசிவம்.

## மருந்து விலை ஏன் ஏறாது!

◆ தற்சமயம் தமிழகம் எங்கும் நடைபெற்று வரும் ''புரட்சித் தலைவி மருத்துவ முகாமிற்கு'' மருந்துக்கடைகள்(Retail) ரூ. 2000/-மும் மொத்த மருந்துக்கடைகள் ரூ. 5000/- மும் கொடுத்துள்ளன. இதற்கு ரசீது கிடையாது. கண்டிப்பாகக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். இல்லையேல் அந்தப் பகுதி மருந்து ஆய்வாளர் ஏதாவது கேஸ் போட்டு கோர்ட்டுக்கு அலைய வைப்பார், இல்லை, கடையை மூட வைப்பார். கீழ் மட்டமே இப்படி இருக்கும் போது, மருந்து தயாரிப்பாளர்களிடம் இன்றைய அரசு எவ்வளவு லஞ்சம் (நன்கொடை) வாங்கியிருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளுங்கள் இதையெல்லாம் அவர்கள் விலையில்தான் ஏற்றி விடுவார்கள்.

கோவில்பட்டி, கு.அ.ஈசாக் சுந்தரம்.

## வண்ணப்படக் கவிதை!

◆ 'ஞானம் பிறந்தது' கவிதை மிக அருமை. பாலைப் பருகுவதில் ஆரம்பித்து வாழ்வு முடிவது வரை மனிதன் வாழ்வில் ஏற்படும் நிகழ்ச்சிகளை வண்ணப்படமாகக் கண் முன் கவிதை வடிவில் ஆக்கித் தந்த கவிஞர் இளவல் ஹரிஹரன் அவர்கள் மிகவும் பாராட்டுதற்குரியவர்.

மதுரை - 14, கே.பி. பொன்னழகு.

## புகைப்படங்கள் நேர்த்தி

◆ ஃபாஷன் பக்கம், என்னைப் போன்ற கிராமப்புற வாசகர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது. அதுவும் இப்பக்கத்தில் நீங்கள் வெளியிடும் புகைப்படங்கள் மிக நேர்த்தியாக இருக்கின்றன.

மொரட்டுப்பாளையம், கே. கஸ்தூரி.

## அன்புரையாய் ஒரு கட்டுரை

◆ அடைசலான அடுக்கு வீடுகளும், விண் ஏறும் விலைகள் தரும் சத்தற்ற உணவும், சினிமா, டி.வி, கேபிள் வளர்ச்சியும் மூப்பு மற்றும் உடற் காரணங்களுடன் துணை சேர்ந்து விட, கண்ணாடி மனிதர்கள் பெருகிடும் இந்நாளில் உமது 'மூக்குக் கண்ணாடிக் கட்டுரை' உற்ற தோழனின் அனுபவ அன்புரையாய் மிளிர்ந்தது.

மயிழுஞ்சேரி, எஸ்.கே. ரவிச்சந்திரன்.

## கவியரசு இருந்தால்...

◆ ''ஊரு கெட்டுப் போனதுக்கு மூர் மார்க்கெட்டு அடையாளம்'' என்று பாடிய கவியரசு இன்று உயிரோடு இருந்திருந்தால் மூர் மார்க்கெட் லஞ்ச விழாவைக் கண்டு என்ன பாடியிருப்பாரோ என்று மனம் வேதனையில் குமைகிறது.

சென்னை - 28, எம். தியாகராஜன்.

## வரிப்பண விரயம்!

◆ மகாமகம் தொடர்பான டி.வி. நேர்முக ஒளிபரப்பு பார்த்தேன். இது மகாமகச் சிறப்பா, முதல்வர் முடிசூட்டு விழாவா என்றே புரியவில்லை. டி.வி நிலையத்தார் மிகவும் தாழ்ந்த நிலைக்குத்தள்ளப்பட்டுள்ளனர் என்றே தோன்றுகிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதலமைச்சரின் நடவடிக்கைகள் பழையகால ராஜாக்களின் தர்பார்களையும் மிஞ்சும் நிலையில் உள்ளன. முன்னும் பின்னும் ஆயிரக் கணக்கான வாகனங்கள். பல்லாயிரம் போலீசார். எங்கும் கட் அவுட்டுகள். மக்களைப் பிழிந்து வாங்கும் வரிப்பணம், விளம்பரமாகச் செலவழிக்கப்படுகிறது. செயலளவில் எந்த முன்னேற்றமும் இல்லை.

சென்னை - 24, வி. ராமநாதன்.

வட்டமேஜை

● எஸ். ராமசுப்பிரமணியன், வீரவ நல்லூர்.

? 'அஹிம்சை வழியே சிறந்தது' என்று போதித்த அகிலனின் 'வானமா பூமியா' தொடர் எப்படி?

! நல்ல போதனைதான்; ஆனால் இப்படி ஒரு தொடர் வருவதற்குள் 'வன்முறையே சிறந்தது' என்று போதிக்கும் நூறு சினிமாக்கள் வந்து விடுகின்றனவே!

● ஆர். பிரகாசம், கோவிலூர்.

? பணத்தின் மதிப்பு இப்படி குறைகிறதே...?

! குறைவான உற்பத்திப் பொருள்களை அதிகமான கரன்ஸி நோட்டுக்கள் துரத்தும் போது விலை உயர்கிறது; ரூபாயின் மதிப்பு குறைகிறது. பண வீக்கத்தைக் குறைக்க அதிக வரி விதிக்கிறார்கள், பட்ஜெட் பற்றாக்குறையைக் குறைக்க முயற்சி மேற்கொள்கிறார்கள். இது போதாது. அரசின் அநாவசிய செலவினங்கள் குறைய வேண்டும். தவிர கறுப்புப் பணப் புழக்கம் நீங்க வேண்டும். இதற்கு வரிகளைக் குறைப்பது ஒன்றே வழி. கறுப்புப் பணம் ஏராளமாய்ப் புழங்கும் துணிவில் கள்ள நோட்டுக்களும் அதிகரித்து விட்டன!

● கு. கணேசன், பனங்கோட்டூர்.

? பஞ்சாப் தேர்தல் முடிவுகள் உணர்த்தும் பாடம் என்ன?

! பிரதமர் நரசிம்மராவ் தமது வாக்கைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையை அளிக்கிறது. பயங்கரவாதிகளின் அச்சுறுத்தலையும் மீறி முப்பது சதவீத மக்களாவது தங்கள் ஜனநாயக உரிமையைக் காத்துக் கொள்வார்கள் என்பதை நிரூபிக்கிறது.

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

? கார்பசேவ் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்?

! உலக நாடுகள் பலவற்றில் உள்ள பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் வழங்கி, தமது செல்வாக்கைக் குறையாமல் பாதுகாத்துக் கொண்டிருக்கிறார். எப்போது மறுபடி சான்ஸ் கிடைக்குமோ என்னமோ, மங்கி மறைந்து விடக் கூடாதல்லவா!

● சி. சுபாஷ் சந்திரபோஸ், செட்டிகுளம்.

? வாஜ்பேயி துணை ஜனாதிபதியாகிறாராமே?

! பத்மபூஷண் தரப்பட்ட போதே இந்தப் பேச்சு அடிபடத் தொடங்கி விட்டது. மத்திய காங்கிரஸ் ஆட்சி மைனாரிட்டியாக இருப்பதால் பா.ஜ.க. வின் ஆதரவைப் பெற இந்த முயற்சி என்று பேசப்பட்டது. ஆனால் ரயில்வே பட்ஜெட்டை அத்வானி வாங்கு வாங்கு என்று வாங்கியிருப்பதைப் பார்த்தால் காங்கிரஸின் இந்தச் சாணக்கியம் பலிக்குமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது.

● ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

? 'ஜெயலலிதா காலில் செருப்பாக இருப்பேன்' என்று கூறுகிறாரே குடந்தை எம்.எல்.ஏ. ராமநாதன்?

! மெய்யாலுமே ஒரு தலைவரிடம் தீவிர பக்தி கொண்டிருந்தால் ஒரு தொண்டர் இவ்வாறு நடந்து கொள்வதில் தவறில்லைதான். ஆனால் செருப்பாக இருந்தும் காலில் முள்குத்த விடுவது எதில் சேர்ந்தது? இல்லாவிட்டால் ''மகாமகத் தாயே வருக'' என்று போஸ்டர் ஒட்டி வரவேற்பாரா? ஒரு நல்ல தொண்டர், தலைவரைப்



☛ செருப்பாக இருப்பேன்!

## 'ஜெ' பிறந்தநாள் கொண்டாடாதது...?



☛ பிறந்த நாள் கொண்டாடாதது...?



☛ வானமா? பூமியா?



☛ என்ன செய்கிறார்?



☛ வாக்கைக் காப்பார்

போற்றினால் போதாது; அவரைக் காக்கவும் வேண்டும். காப்பது என்பது தலைவர் தவறிழைக்கலாம் என்று தோன்றும் போது தக்க சமயத்தில் எச்சரிப்பதையும் உள்ளடக்கியது.

● கே. ஆர். விஜயா, கோவை.

**? பஞ்சாப் தேர்தலில் இந்து வோட்டு வங்கியை பா. ஜ. கைப்பற்ற இயலவில்லையே?**

! மொத்தத்தில் 25 - 30 சதம் வோட்டுக்கள்தான் விழுந்திருக்கின்றன என்னும் போது அவை கட்சிகளின் செல்வாக்கைச் சரியானபடி பிரதிபலிப்பதாகக் கூற முடியாது. காங்கிரஸ் மாநில சட்ட சபையில் முக்கால்வாசி இடங்களைப் பெற்றுவிட்டது. ஆனால் போடப்பட்ட வோட்டுக்களில் ஒன்பது சதம்தான் பெற்றுள்ளது. நாடாளுமன்றத்திலும் அதன் பலம் பெருகியுள்ளது. 13 இடங்களில் 12ஐத் தட்டிச் சென்றது. ஆனால் இதற்கு 11 சதம் வோட்டுக்களைத்தான் பெற்றது. பகுஜன் சமாஜக் கட்சியும், பி.ஜே.பி.யும் கிட்டத்தட்ட சமமான அளவில் வோட்டுக்களைப் பெற்றும் முன்னது ஒன்பது இடங்களையும் பின்னது ஆறு இடங்களையும் பெற்றுள்ளன.

● வீ. சோழன், செம்போடை.

**? சமீபத்தில் தங்களை அதிர்ச்சிக்குள்ளாக்கிய துயரச் சம்பவம்?**

! ஃபுட் போர்டிலிருந்து தவறி விழுந்துவிட்ட பள்ளிச் சிறுமி பல்லவன் பஸ் ஸாக்குப் பலியானது. நமது டிரைவர் - கண்டக்டர்கள் எச்சரிக்கை அம்சத்தில் இன்னும் மைல் கணக்கில் முன்னேற வேண்டியிருக்கிறது. தவிர, 'குழந்தைகளுக்குச் சாலைப் பாதுகாப்பு பற்றி பள்ளிகளில் நன்கு போதிக்கப்பட வேண்டாமா?' என்ற கேள்வியும் எழுகிறது.

● எஸ். பிரியா, பாளையங்கோட்டை.

**? 'பிரதமர் நேரு விஜயம் செய்த கும்பமேளாவில் 300க்கு மேற்பட்டவர்கள் இறந்த போது அப்போதைய எதிர்க் கட்சிகள் பிரதமர் மீது பழி சுமத்தவில்லை' என்கிறதே அரசு அறிக்கை?**

! மகாமகம் மகா சோகமாக முடிந்தது எனில், அதையொட்டிய அரசு அறிக்கை மகாமோசமாக அமைந்தது. கடந்த கால நிகழ்ச்சிகள் - தவறுகள் - நமக்குப் பாடமாக அமைந்து நாம் முன்னெச்சரிக்கையாக நடந்து கொள்ள உதவ வேண்டுமே தவிர அவற்றை எடுத்துக் காட்டுக்களாகக் கொண்டு மேலும் தவறுகள் செய்து கொண்டிருக்கக் கூடாது.

● என். சம்பத், தூத்துக்குடி.

**? கும்பகோணம் மகாமகத்துக்குத் தமிழக முதல்வர் போகாதிருந்திருந்தால் உயிர்கள் பலியாகாமல் இருந்திருக்குமா?**

! நிச்சயம். ஏற்பாடுகள் கனகச்சிதமாகச் செய்யப்பட்டிருந்தன என்றுதான் தகவல்கள் கூறுகின்றன. 'ஜெ'யின் திடீர் வருகை அறிவிப்பு, போலீஸாரின் ஏற்பாடுகளில் மட்டுமின்றி, மக்களின் உள்ளக் கிளர்ச்சியிலும் பல மாற்றங்களைச் செய்தது என்பதை மறுக்கவே முடியாது.

● த. சத்தியநாராயணன், சென்னை.

**? ஜெயலலிதா பிறந்த நாள் கொண்டாடாதது எதைக் காட்டுகிறது?**

! 'நான் அடிக்கிற மாதிரி அடிக்கிறேன்; நீ அழுகிற மாதிரி அழு' என்பதைப் போல் உள்ளது. அவருக்கும் சேர்த்து வைத்து அமைச்சர்களும் மற்றவர்களும் அமர்க்களப்படுத்தி இருக்கிறார்களே! அருவருப்பு ஏற்படும் அளவுக்கு விளம்பரங்களைக் குவித்திருக்கிறார்களே! போதாக்குறைக்கு அங்கப்பிரதட்சிணம் முதல் பச்சை குத்திக் கொள்ளுதல் வரை பல்வேறு நிகழ்ச்சிகள்! மகாமகம் மகா சோகமாக முடிந்ததற்கு வருந்தும் வகையில் பிறந்த நாள் கொண்டாடப் போவதில்லை என்று முடிவெடுத்த முதல்வர் மற்றவர்களையும் 'ஆர்ப்பாட்டம் வேண்டாம்' என்று கட்டுப்படுத்தியிருக்கலாமே.

● கே. வஸந்தன், மாப்பிள்ளைக் குப்பம். ❑

**? ஒழுக்கமுள்ள தலைவர் யார்?**

! பொது வாழ்வில் மட்டுமின்றி அக வாழ்விலும் ஒழுக்க சீலராக விளங்க வேண்டும். பொது வாழ்வில் ஒழுக்கம் என்பது லஞ்சம் வாங்காதவர் என்பது மட்டுமல்ல; அதிகார துஷ்பிரயோகமும் இருக்கக் கூடாது. ராஜீவ் காந்தி அறக்கட்டளைக்கு நன்கொடை அளிக்குமாறு கோரும் ஒரு சுற்றறிக்கையை அதிகாரிகளுக்கு ஓர் அமைச்சர் அனுப்பினால் கூட அது அதிகார துஷ்பிரயோகம்தான்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. வஸந்தன்,
15 B-4, குடவாசல் சாலை,
மாப்பிள்ளைக்குப்பம்,
நன்னிலம் - 610 105.





# ஆஹா! நானும் இப்போ ஒரு பாலிசிதாரர்.

எனக்கும் ஆயுள் காப்பீடு செய்தாச்சு!
எங்கப்பா எனக்கே எனக்காக எல்.ஐ.சி.
புதிதாக வழங்கும் ஜீவன் கிஷோர் பாலிசி
எடுத்திருக்காரே! இந்தப்பாலிசி என்னை
மாதிரி மழலைப் பட்டாளங்களுக்காகவே
ஏற்படுத்தப்பட்ட நல்ல திட்டம். நான்
பெரியவனானதும், எனக்கே எனக்கு இந்தப்
பாலிசி மூலம் நிறைய பணம் கிடைக்கும்.
அப்பா மாதிரியே, நானும் பெரிய மனிதன்
ஆவேனே!

ஜீவன் கிஷோர் பாலிசி
எடுத்திடுங்கள்! குழந்தைகளின்
கனவு நனவாகும்!

மேலும் விவரங்களுக்கு, உங்கள் அருகில்
உள்ள எங்கள் கிளை அலுவலகத்தையோ,
முகவரையோ அல்லது வளர்ச்சி
அதிகாரியையோ உடனே அணுகுங்கள்.

**ஜீவன் கிஷோர்**



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

Pratibha/LIC/210/91-B/TAM

# உலகக் கோப்பை: நிரம்பி வழியும் புள்ளி விவரம்



பிஷன்சிங் பேடி



மதன்லால்



கபில்தேவ்



ஃபரூக் என்ஜினீர்

முதல் மாட்ச்சில் முதல் பந்தை வீசியவர் இந்தியாவின் மதன்லால்; அதைச் சந்தித்து ஆடியவர் இங்கிலாந்தின் ஜே. ஜேம்சன்.

● முதன் முதலாக 'மான் ஆஃப் தி மாட்ச்' விருது பெற்றவர் இந்தியாவைச் சேர்ந்த ஃபரூக் என்ஜினீர். கிழக்கு ஆப்பிரிக்க அணிக்கு எதிராக 1975 இல் விளையாடிய போது இச் சிறப்பைப் பெற்றார்.

● முதன் முதலாக ரன் அவுட் ஆனவர் ரமேஷ் சேத்தி. (கிழக்கு ஆப்பிரிக்க அணியைச் சேர்ந்தவர்.)

● இங்கிலாந்தும் வெஸ்ட் இண்டீஸும் மோதிய இறுதி ஆட்டத்தில் (1979) வெஸ்ட் இண்டீஸ் அணியினர் மூவரும் இங்கிலாந்து அணியினர் ஐவரும் ரன் எடுக்காமலேயே அவுட் ஆனார்கள்!

● முதல் இரண்டு உலகக் கோப்பை போட்டிகளின் போது இந்தியா ஆறு மேட்சுகளில் ஆடி, கிழக்கு ஆப்பிரிக்காவுக்கு எதிராக ஒரே ஒரு மாட்சை மட்டும் வென்றது!

● விவியன் ரிச்சர்ட்ஸ் ஸ்ரீலங்காவுக்கு எதிராக எடுத்த 181 ரன்களே (1987 இல்) உ.கோப்பைப் பந்தயங்களில் இதுவரை எடுக்கப்பட்ட அதிகமான தனி நபர் ஸ்கோர்.

● மிக அதிகமான ரன்கள் வித்தியாசத்தில் ஒரு உ. கோப்பை மாட்சில் வென்ற அணி இங்கிலாந்து. 1975 இல் 202 ரன் வித்தியாசத்தில் இந்தியாவைத் தோற்கடித்தது.

● ஜிம்பாப்வேக்கு எதிராக 181 நிமிடங்களில் 175 ரன்கள் எடுத்தார் கபில் தேவ். 1983 இல் இவர் எடுத்த இந்த ஸ்கோர்தான் ஓர் இந்திய ஆட்டக்காரர் இப்போட்டியில் எடுத்த அதிகபட்ச ஸ்கோர் ஆகும்.

● ஒரே மாட்சில் அதிகபட்ச விக்கெட்கள் வீழ்த்தியவர் வெஸ்ட் இண்டீஸின் வின்ஸ்டன் டேவிஸ். ஆஸ்திரேலியாவுக்கு எதிராக 1983 இல் ஏழு விக்கெட் எடுத்தார் இவர்.

● அதிக பட்ச ரன் அவுட்கள் இடம் பெற்ற மாட்ச் 1975 இல் நடந்தது. வெஸ்ட் இண்டீஸுக்கு எதிரான அந்த மாட்சில் ஐந்து ஆஸ்திரேலிய ஆட்டக்காரர்கள் ரன் அவுட் ஆனார்கள்!

● அதிகபட்ச extras இடம் பெற்றது ஜிம்பாப்வேக்கும் வெஸ்ட் இண்டீஸுக்கும் இடையில் 1983 இல் நடந்த போட்டியில். மொத்தம் 56 extras!

● ஹாட் ட்ரிக் எடுத்த ஒரே நபர் இந்தியாவின் சேத்தன் சர்மா. 1987 ரிலையன்ஸ் கோப்பை பந்தயத்தில் நியூசிலாந்தின் ரூதர்போர்ட், அயன் ஸ்மித், சாட்பீல்டு ஆகியோரைத் தொடர்ந்து 'அவுட்' ஆக்கினார்.

● இந்தியாவுக்கு எதிராக இங்கிலாந்தின் டென்னிஸ் ஏமிஸ் எடுத்த 137 ரன்களே உ. கோப்பை பந்தயங்களின் முதல் செஞ்சுரி. (1975)

● பன்னிரண்டு ஓவர் - எட்டு மெய் டன் - ஆறு ரன்கள் - ஒரு விக்கெட் - என மிகச் சிறந்த போலிங் புள்ளி விவரம் பெற்றுள்ளவர் இந்தியாவின் பிஷன் சிங் பேடி. 1975 இல் கிழக்கு ஆப்பிரிக்காவுக்கு எதிராக.

தொகுப்பு : ஜோஸ்கி டேனி

ரிச்சர்ட்ஸ்



சேதன் ஷர்மா



படங்கள் : சாரி

# வத்சலாவின் வேதனைகள்

ஆர்.கே.பத்மா

"தெரியுமா! ரங்கநாயகி அவ குடும்பத்தோட மறுபடியும் மஸ்கட்டுக்கே போயிடப் போறாளாம்" என்றாள் என் மனைவி.

ஆபீசிலிருந்து திரும்பியதும் என் மனைவி தரும் அயிட்டங்கள் மூன்று. சூடாய் டிபன், காப்பி, வம்பு.

இன்றைக்கு வேர்க்கடலைப் பக்கோடாவுடன் சேர்த்து இந்த வம்பு.

"வத்சலாவுக்குத்தான் ஒண்ணுமே செய்யாம போறா. பாவம் வத்சலா. அவளை மலை போல நம்பிண்டிருந்தா" என்றபடி காப்பியைப் பக்கத்தில் வைத்தாள்.

வத்சலா எங்கள் வீட்டில் குடியிருக்கிறாள். அவள் கணவர் சரியான குடிகாரர். மூன்று குழந்தைகள் வேறு. மிகவும் கஷ்ட ஜீவனம். எங்கள் வீட்டில் ராத்திரி மிருந்த குழம்பு, ரசம் எல்லாம் கொடுத்து விடுவோம். அதுதான் அவர்களுக்குச் சாப்பாடு.



"ரங்கநாயகி இண்டியாவுக்கு வந்த நாள்லேந்து வத்சலா அவளைச் சுத்திச் சுத்தி வந்தாளே?" என்றேன் பக்கோடாவை மென்றபடி. ரங்கநாயகி வத்சலாவின் மூத்த சகோதரி. ரங்கநாயகி, அவள் புருஷன் இருவருக்கும் மஸ்கட்டில் வேலை.

"எல்லாத்தையும் பாக் பண்ணிட்டாளாம் ரங்கநாயகி. ஒரு பழைய புடைவையைக் கூட வத்சலாவுக்குக் கொடுக்கலியாம். ஆயிரம் ஆயிரமா சம்பாதிச்சு என்ன பண்றது. கூடப் பிறந்தவாளுக்கு உதவற புத்தி இல்லாமப் போச்சே" என்று நொடித்தாள் என் மனைவி.

"ரங்கநாயகி புருஷன் கோபாலன் என் கிளாஸ் மேட்தான். அவன் சரியான கஞ்சன். அவன் கிட்டேயிருந்து ஒத்தைக் காசு பெயராது."

"ஆம்படையானை விடுங்கோ. இந்த ரங்கநாயகிக்கு மனசு வரலியே. புடைவை மட்டும் நூறு வச்சிண்டிருக்காளாம் பீரோவில. ஒரு ரெண்டு புடைவை, அட கட்டிப் பழசாப் போன புடைவை கொடுக்கலா

மோன்னோ தங்கைக்கு. இந்தக் குடிகாரனைக் கட்டிண்டு வத்சலாவுக்கு என்ன சுகம்? பாதி நாள் சாப்பாட்டுக்கே கஷ்டம். ரங்கநாயகி இங்கே வந்து ஒரு வருஷமாக எல்லாம் பாத்துண்டுதான் இருக்கா. என்ன பிரயோ ஜனம்?''

மாற்றி மாற்றிப் புலம்பத்தான் முடிந்தது எங்களால். ரங்கநாயகியைத் தவிர வேறு உறவு யாருமில்லை வத்சலாவுக்கு. இப்போது மஸ்கட்டுக்குப் போனால் மறுபடியும் ஐந்து வருஷமோ ஏழு வருஷமோ ஆகும் திரும்பி வருவதற்கு. எத்தனையோ செல்வ சுகத்தில் புரளுகிறார்கள் ரங்கநாயகியும், அவள் புருஷனும். வத்சலாவுக்கு ஏதேனும் உதவி செய்யக் கூடாதா?

அவர்களை நன்றாக நாலு கேள்வி கேட்க வேண்டும் என்று தோன்றியது. கோபாலன் என்னோடு பள்ளியில் படித்தவன். அந்த உரிமையில் வத்சலாவுக்கு ஏதேனும் செய் யும்படி வற்புறுத்தினால் என்ன?

செருப்பை மாட்டிக் கொண்டு அடுத்த தெருவில் இருந்த ரங்கநாயகியின் வீட்டுக்குச் சென்றேன்.

''அட நீயா... வா வா'' என்று வரவேற்றான் கோபாலன். ரங்கநாயகியும் பக்கத்தில் வந்து நின்றாள். அவள் கையிலும், கழுத்திலும் தங்கம் மினுமினுத்தது. தோடுகள் டாலடித்தன. பொதுவாய் ஆபீஸ், குழந்தைகளின் படிப்பு என்று பேச்சு சுற்றி விட்டு யதேச்சையாய் வத்சலாவிடம் வந்து நின்றது. நான் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடாது வத்சலா படும் கஷ்டங்களை அடுக்கினேன். அவர்களிருவரும் மஸ்கட்டிலிருந்து இந்தியாவுக்கு வருகிறார்கள் என்றதும் வத்சலா எத்தனை எதிர்பார்ப்புகளோடு காத்திருந்தாள் என்பதை விளக்கினேன்.

கோபாலன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''அக்காவும், அத்திம்பேரும் ஏராளமான பணத்தோடு வரப் போறா. வந்து அவ குடும்பத்தையே சுவீகாரம் எடுத்துக்கப் போறான்னு நினைச்சாளா அவ?'' என்றான் கிண்டலாய்.

''கோபாலா... அப்படியெல்லாம் பேசாதே. அவ உன் மச்சினி. வாழ்க்கையில கஷ்டப்படறா. ஏதோ உன்னால முடிஞ்ச உதவியை நீ செய்யணும். அதான் தர்மம்'' என்றேன் கொஞ்சம் சூடாக.

''எது தர்மம்? ஒட்டுண்ணியாட்டம் இன்னொருத்தரை சார்ந்துண்டு குஷாலா வாழ ஆசைப்படறதா தர்மம்?'' என்றான் கோபாலன். தொடர்ந்து படபடத்தான்...

''நன்னாக் கேட்டுக்கோ. இன்னிக்கு நானும், என் மனைவியும் வெளி தேசத்துல போய் ஆயிரக்கணக்கில சம்பாதிக்கிறோம். வசதிகள் வந்திருக்கு. வாழ்க்கைத் தரம் உசந்திருக்கு. ஆனா, இதுக்கு நாங்க ஆரம்ப நாள்லே எத்தனை கஷ்டப்பட்டோம், எத்தனை பொறுமையா எங்க கஷ்டங்களைத் தாங்கிண்டு முன்னுக்கு வந்திருக்கோம்னு உனக்குத் தெரியுமா?'' என்றான் கோபமாக.

''சாதாரணமா, பெருக்கற வேலைக்கே மாசம் அஞ்சாயிரம் சம்பளம். வேலைக்காரிக்கு ஏழாயிரம் சம்பளம்னு எல்லாரும் ஆசை காட்டினதுல டைப்பிஸ்ட் வேலையை விட்டுட்டு இவர் துணிஞ்சு மஸ்கட்டுக்குப் போயிட்டார். போனதும்தான் தெரிஞ்சுது, தன்னை ஆதரிக்கறதுக்கு யாருமே இல்லைன்னு'' என்றபடி ரங்கநாயகி எங்களுக்கு நடுவில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

''நன்னாக் கேட்டுக்கோ. இண்டியாவில இருந்த வேலையை ரிசைன் பண்ணிட்டு, கிடைச்ச பணத்துல ஏதோ தைரியத்துல அந்த நாட்டுல போய் நின்னேன். படிப்பும் பெரிசா கிடையாது. பாஷை தெரியாது, சாப்பாடு சரியில்லை. என்ன திண்டாட்டம். ஹோட்டல்ல மாமிசம் சாப்பிட்ட தட்டைக் கழுவியிருக்

## கொடுத்து வைத்த ஜீவன்கள்

❑ வளர்ப்பு மிருகங்களிடம் பாச உணர்வு மிக்க பிரிட்டிஷ் மக்கள், வெளியூர் செல்லும் போது அவற்றை விடுதிகளில் விட்டுச் செல்கிறார்கள். ''ஒழுங்காக நடந்து கொள்ளும் நாய், பூனை, ஓராங்குட்டான்களுக்குக் கட்டணம் கிடையாது'' என்று அறிவிக்கிறார் மிருக நேய விடுதிக் காப்பாளர் ஒருவர்.

''மனிதர்களை விட நாய்கள் எவ்வளவோ தேவலை ஸார்! அவை சிகரெட் பிடித்தபடி தூங்கி, படுக்கையைப் பற்ற வைப்பதோ, பணிப் பெண்களிடம் தவறாக நடந்து கொள்வதோ கிடையாது!'' என்கிறார் ஒரு விடுதி மேலாளர்.

.Country life in Britain என்ற நூலிலிருந்து

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்



கேன். அந்த வேலைதான் கிடைச்சது. குளிர்ல செத்தே போயிடுவேன்னு நினைச்சேன்'' என்றான் கோபாலன் அந்த நாள் ஞாபகமாக.

''இங்கே என்னடான்னா சாப்பாட்டுக்கு எங்களுக்குக் கஷ்டம். எப்ப இவர்கிட்டேந்து தகவல் வரும்னு தவிச்சிண்டு நின்னேன் குழந்தைகளோட. இரண்டு வருஷம் கஷ்டம்தான். கடைசில இவருக்கு டைப்பிஸ்டு உத்தியோகம் கிடைச்சது. குழந்தைகளோட நானும் போய் இவரோட சேர்ந்தேன்.''

''மெதுவா இவளையும் ஒரு வேலையில சேத்துட்டேன். இவளும் நானும் இன்னிக்கு ஒரு பொஸிஷன்லே வந்திருக்கோம்னா எத்தனை சோதனை, எத்தனை சங்கடம் தாண்டி வந்திருப்போம்.''

''இப்பவும் அந்த பாலைவனத்துல வெயில், குளிர் பார்க்காம உழைக்கிறோம். உழைச்சு சேத்த சொத்து இது. குழந்தைகளுக்கு நல்ல படிப்பு, நல்ல வாழ்க்கை அமைச்சுக் கொடுக்கணும்னு இத்தனையையும் சகிச்சிண்டிருக்கோம்.''

''அதுக்காக உன் மச்சினிக்கு உன்னாலான உபகாரம் செய்யக் கூடாதா?''

''செய்யறேன். அவ புருஷனுக்கு வேலை வாங்கித் தரேன். வரச் சொல்லுன்னேன். உழைக்கிறதுக்கு அவன் தயாரில்லை. ஏதோ ஏழு தலைமுறைக்குப் பணம் சேத்துட்ட மாதிரி சோம்பலா எப்போப் பாத்தாலும் குடிச்சுட்டு படுத்தே கிடக்கறான்.''

''பணமா ஏதாவது உபகாரம் பண்ணக் கூடாதா. ஒரு தர்மமா...''

''இல்லை. அந்த மாதிரி பணமா கொடுக்கறது தர்மம் இல்லை. அது அதர்மம்கிறேன் நான். நீ-கொடுக்கற பணம் ஒரு குடிகாரனை மகா குடிகாரனாக்கிறது. ஒரு சோம்பேறியை நிரந்தர சோம்பேறியாக்கறது. எப்படி, எத்தனை நாளுக்கு நான் அந்தக் குடும்பத்தைக் காப்பாத்த முடியும்?'' என்றான் கோபாலன்.

''நாங்க வத்சலாவுக்கு எந்த உபகாரமும் செய்யக் கூடாது. இப்ப அவ புருஷன் ஏதோ ஓரளவுக்காவது உழைச்சு அவாளைக் கவனிச்சுக்கறான். நாங்க சப்போர்ட் பண்ண ஆரம்பிச்சா அக்காகிட்டேந்து கொண்டு வாடீன்னு




மட்டமான புத்தகத்தை விட மோசமான திருடன் கிடையாது - இத்தாலிய பழமொழி.

- மஞ்சுதேவன்

தன் பொண்டாட்டிய மிரட்டி, எங்களண்டை பணம் பறிச்சுண்டு குடும்பத்தைப் பத்திக் கவலை இல்லாம முழு நேரக்குடிகாரனா ஆயிடுவான். இப்ப சொல்லுங்கோ. ஒரு குடிகாரனை வளரவிடறது தர்மமா?'' அடுக்கடுக்காய் ரங்கநாயகியும், கோபாலனும் கேள்விகளை எடுத்து வீச நான் வாயடைத்துப் போனேன்.

''அது சரி, வத்சலா உங்களுக்கு ஒழுங்கா வாடகை கொடுக்கிறாளா?''

''எ.... எங்கே... பாவம், அவளுக்குக் குடித்தனம் நடத்தறதே பெரிய கஷ்டமா இருக்கு, எனக்கு மாசம் முன்னூறு ரூபாய் எப்படி கொடுப்பா அவ?''

''எத்தனை மாசமா வாடகை கொடுக்கலை?''

''முதல்ல தாமதமா குடுத்தா, இப்ப கொஞ்சம் கொஞ்சமா சுத்தமா நின்னுபோச்சு. ஏறத்தாழ ஒரு வருஷமா வாடகையே வரலை.''

''பாத்தீங்களா. உங்க தருமசிந்தனை அவங்களை எங்கே கொண்டு போய் விட்டிருக்குன்னு. நீங்க வற்புறுத்திக் கேட்காததால வாடகையாக் கொடுக்க வேண்டிய பணம் எப்படியோ செலவாயிண்டிருக்கு.'' என்றாள் ரங்கநாயகி பளிச்சென்று. ''சினிமா அது இதுவென்று வத்சலா குழந்தைகளோடு எங்கேயாவது போய்க் கொண்டுதான் இருக்கா.... அந்தப் பணத்தைச் சேமிச்சுப் பாதி வாடகையாவது கொடுக்க ஏன் அவளுக்குத் தோணலை....?''

அவர்களிடம் விடை பெற்றுக் கிளம்பியபோது மனமாற்றம் எனக்கும் என் மனைவிக்கும்தான் அவசியம் என்று தோன்றியது.

# 9

கணப்பை வெறித்தவாறு யோசித்தான் பிரகாஷ். விரைவில் உலகம் மறந்தது. இனி அவன் குறி ஆருயிர் மனைவியை மீட்பது மட்டுமே. எப்படி போலீஸ் தடையை மீறுவது? எப்படியாவது...!! முதலில் ஹோட்டல் வாசல் பாரா ஆசாமிகளுக்குத் தெரியாமல் பெட்டியுடன் வெளியே செல்ல வேண்டும்....

அப்புறம், அந்த ஏசிபி தேவதேவனை எப்படி சமாளிப்பது? அவன் கிளம்பும் சமயம் அவர் எங்கிருப்பார் என்று எப்படி அறிவது?

அவர் அவன் பார்வையில் இருக்க வேண்டும். பிறகு... பிறகு....

சட்டென்று அவன் மூளைக்குள் 'க்ளிக்' ஒலி கேட்டது.

திட்டம் ஒன்று புலனாகியது. காரில் கிளம்பினான். வாசல் தாண்டிச் சாலை முனை திரும்புவதற்குள் பாரா ஆசாமி ஒருவன் சடுதியில் பைக்கைக் கிளப்பி, தன்னைப் பின் தொடர்வதைக் கவனித்தான். தனக்குள் சிரித்துக் கொண்டான்.

முதலில் ஒரு ரெடிமேட் துணிக் கடைக்குச் சென்று காக்கி பேண்ட் வாங்கி பிளாஸ்டிக் கவரில் பார்சலாக்கிக் கொண்டு வெளியே வந்தான். தொலைவில் காத்திருந்த பாரா ஆசாமி இவனைக் கண்டதும் அவசரமாக சிகரட்டைத் தூர கண்டிவிட்டுத் தன் பைக்கில் ஆரோகணித்தான். பார்க்காத மாதிரி காஷுவலாகக் காரை அடைந்து கிளப்பினான்.

ஒரு டிபார்ட்மென்டல் ஸ்டோரில் ஃப்ளாஸ்க் ஒன்று வாங்கிப் பையினுள் போட்டு கொண்டான்.

அடுத்த நிறுத்தம் ஆஸ்பத்திரி...

களைப்பான போஸில் தலைவலித் தைலம் தேய்த்தவாறு சிறிது நேரம் எழிலான ஏரியை வெறித்திருந்து விட்டுக் கிளம்பினான் பிரகாஷ்.



மாலை ஆறு.

''என்ன தயாராயிட்டியா பிரகாஷ்?'' - அப்பா கேட்டார்.

''ரெடிதான் டாட்.''

''குட். அவன் சொன்ன மாதிரி பணத்தைக் கமுக்கமா வெச்சுட்டு வந்துரு'' என்றவர் சட்டை எடுத்து அணிந்து கொண்டார்.

''எங்க கிளம்பிட்டீங்கப்பா?''

''மனசு சரியில்லைடா. என் மருமக என்ன பாடுபடறாளோன்னு கிடந்து அடிச்சிக்குது. பார்ல சித்த நேரம் உட்கார்ந்துட்டு வர்றேன்.''

இந்த சமயம் இவர் இங்கு இல்லாதிருப்பதும் நல்லதுதான் என்று நினைத்துக் கொண்டான். ''மெதுவாகவே வாங்க டாட்'' என்றான்.

''புரியுது பிரகாஷ். ஆல் தி பெஸ்ட்'' என்றவாறு கிளம்பினார்.

ரூம் சர்வீஸ் அழைத்து ப்ளாஸ்க்கில் காப்பி, இரண்டு கப்-சாசர் தருவித்துக் கொண்டான். நேரம் 6.30. ஏழரைக்குத்தான் கிளம்பவேண்டும். நிதானமாக இயங்கினான்.

அலமாரி ஹாங்கரில் மாட்டியிருந்த சட்டைப் பாக்கெட்டில் கைவிட்டான் பிரகாஷ். *'நீங்க சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கீங்க சார்!'*




காகிதப் பொட்டலம் வெளியே எடுத்தான். *'இதுல மூணு தினுசு மாத்திரை தேர்ந்தெடுத்துப் பொடி பண்ணியிருக்கேன். அம்சமா வேலை செய்யும்!'*

பிரித்த பொட்டலத்தில் வெளுத்த பழுப்பு நிறப் பொடி இரண்டு ஸ்பூன் அளவு இருந்தது. *'இது போதுங்க! பொடியைக் கலக்கிக் கொடுத்த அஞ்சாவது நிமிஷம் ஆசாமி சாமியாடத் தொடங்கிடுவான். பத்தாவது நிமிஷம் கண் செருகிரும். பதினைந்தாவது நிமிஷம் –'*

பிளாஸ்க் மூடி திறந்தான். ஆவி கிளம்ப மணத்த காப்பியினுள் பவுடரைக் கொட்டினான். *'பயப்படாதீங்க சார், மயக்கப்படுத் தும். சும்மா சொஸ்தமாத் தூங்குவாரு. அவ்வளவுதான். வேற ஒண்ணுஞ் செய்யாது. நீங்க சொன்ன ஒரு மணி நேரம் வரை மயக்கத்துக்கு கியாரண்டி!'*

திரும்பவும் மூடிவிட்டுக் காப்பி பிளாஸ்க்கை நன்றாகக் குலுக்கினான். *'எந்நேரமும் வந்திடுவாரு டாக்டர். ஜல்தியாப் பணத்தைக் கொடுத்துவிட்டு மூச்சு காட்டாமக் கிளம்பிருங்க.'*

காலையில் தான் நீட்டிய ஐந்து நூறு ரூபாய்த் தாள்களைக் கண்டதும் கம்பவுண்டரின் கண்கள் ஆசையுடன் பிரத்யேகமாகப் பளபளத்ததை ஆயுளில் பிரகாஷ் மறக்கமாட்டான். பணத்தின் மகிமை பற்றி அப்பா சொன்னது உண்மைதான் என்று தற்போது அவனுக்குப் பட்டது. சடுதியில் துரோகம் இழைக்கத் தூண்டிய அதன் சக்தி....

பணம் என்ற அரிய சமாசாரம்தான் சிந்துவை விடுவிக்கவும் போகிறது.

காத்திருந்து ஆறே முக்காலானதும் தொலை பேசியில் ஏசிபி தேவதேவனை அழைத்தான்.

''உங்களை அவசரமாப் பார்க்கணும். சில தகவல்கள் இப்போ ஞாபகம் வந்திருக்கு சார்! என் மனைவியைக் கண்டுபிடிக்க உதவுமான்னு பாருங்க. இப்போ என் அறைக்கு வர முடியுமா சார்?''

''முடியுமாவாவது... காத்திட்டிருக்கேன்!'' - எதிர்முனையில் ஏ.சி.பி.

போனை வைத்து விட்டு அறையினுள் நர்வசாக நடை பயிலத் தொடங்கினான். குறித்த இடத்தில் பணம் வைத்ததும் காலை எட்டு மணிக்குச் சிந்து ஜாவை அனுப்பி வைப்பதாகச் சொல்லியிருக்கிறான். தன் மனைவியை எப்போதடா பார்ப்போம் என்றிருந்தது. அவனின் ஒவ்வொரு அணுவும் ப்ரிய சிந்துவிற்காக ஏங்கித் துடித்தது.

*'இட்ஸ் சர்ப்ரைசிங் சிந்து!'*

*'எதுப்பா? அறிவிக்காம நான் வந்ததா?'*

*'இல்லைம்மா. உன் ட்ரெஸ்... டாப்ஸ், மிடி டிராப்ஸ், பொட்டு, பூ எல்லாம் ஒரே மஞ்சள் மயம்! என்னாச்சு உனக்கு? மஞ்சள் நிறம் பிடிக்காதுன்னியே நேத்து?'*

*'பிடிக்காமத்தான் இருந்தது. ஆனா*

பத்மா ரவிசங்கர்

உங்களுக்குப் பிடிக்கும்னு தெரிஞ்சதும் என் மனசு மாறிடுச்சு. இனிமே என் பிரகாஷுக்குப் பிடிச்ச எதுவும் எனக்குப் பிடிக்கும்.'

அவளின் ஆழமான காதல் நினைவில் அவன் மனம் விம்மியது. உனக்காக நான் எதுவும் செய்யலாம்.

கதவு தட்டப்படும்போது நேரம் 7.00. உள்ளே பிரவேசித்த ஏசிபி காக்கி உடுப்பிலிருந்தார். அவன் எதிரில் அமர்ந்து தொப்பி கழற்றி மடிமீது வைத்துக் கொண்டார். கையிலிருந்த 'பைக்' சாவியைப் பக்கத்திலிருந்த டீப்பாய் மேல் ஓசையின்றி வைத்தார்.

''ஜீப்புல வந்தீங்களா?''

''ம்கும். புல்லட். கர்டஸி: சாமுவேல்!'' என்று புன்னகை புரிந்தார்.

அவரின் ஒவ்வொரு சிறு அசைவிலும் துல்லிய நேர்த்தி, ஒழுங்கு.

''என்ன விஷயம் பிரகாஷ்?''

''சொல்றேன். அதுக்கு முன்னே காப்பி சாப்பிடுங்க'' என்றவன் அவர் தலையசைப்பிற்குக் காத்திராமல் பிளாஸ்க்கிலிருந்த காப்பியை இரு கப்புகளில் ஊற்றினான்.

''ரூம் சர்வீஸ் இருக்கையில் பிளாஸ்க்குல காப்பி வச்சிருக்கீங்க!'' என்று வியந்தவாறு ஒரு கோப்பையை வாங்கிக் கொண்டார் தேவதேவன்.

பிரகாஷ் படபடப்பை மறைத்துக் கொண்டு ''நான் ஒரு காப்பி பைத்தியம்! எப்பவும் பிளாஸ்குல ஸ்டாக் இருக்கும் சார்,'' என்றான்.

ஏசிபி சோபாவில் நன்றாகச் சாய்ந்து கொண்டு ''இப்ப சொல்லுங்க'' என்றவர் முதல் சிப் காப்பி பருகியபின் ''வெரி ஸ்ட்ராங்! இப்படிப் பருகினா உங்க உடம்புக்கு ஆகாது'' என்றார் அப்பாவியாக. ''காப்பி ஆறிடப் போகுது பிரகாஷ்.''

தேவதேவன் கோப்பையைக் காலி செய்து விட்டிருந்ததைப் பார்த்து மனசுக்குள் மகிழ்ந்து, ''இருக்கட்டும் சார். கொஞ்சம் ஆறின பிறகு குடிக்கிறேன்'' என்றான்.

''சரி. என்னமோ சொல்லணும் னீங்க?''

''சொல்றேன் சார்.... மூணு நாள் முன்னே சில்வர் கேஸ்கேடு போயிருந்தோம் சார். சிந்துஜாவுக்கு நீர் வீழ்ச்சின்னா ரொம்ப இஷ்டம். அங்கே நல்ல கூட்டம் இருந்ததாலே முதல்ல அவளைக் கவனிக்கலை நாங்க....'' சுவாரசியமாக ஆரம்பித்து ஆஸ்கார் பெற்றுத் தரும் நடிப்பு காண்பித்தான். காப்பியில் கலந்துள்ள மருந்து வேலை செய்ய ஐந்து நிமிடம் அவகாசம் தேவை.

இரண்டாம் நிமிடமே தேவதேவனிடம் தொடர்ச்சியாக கொட்டாவிகள் கிளம்பின. மூன்றாம் நிமிடம், ''இட்டியா இருக்கு! வெழி சாழி....'' என்றார் குழறலாக. அடுத்த நிமிட முடிவில் கண்கள் தாமாகச் செருக, சடுதியில் உறக்க தேசம் சென்றுவிட்டார்.

பிரகாஷ் பரபரவென்று செயல்பட்டான். காலையில் வாங்கின காக்கிப் பேண்ட்டை எடுத்து அணிந்து கொண்டான். தேவதேவனின் காக்கி சட்டையைச் சிறிது சிரமப்பட்டுக் கழற்றியெடுத்து அணிந்து கொண்டான். ஏசிபி ஏறக்குறைய அவன் உயரம்தான். சட்டை சரியாக இருந்தது.

ஆழ்ந்த உறக்கம் அல்லது மயக்கத்திலிருந்த தேவதேவனைச் சோபாவிலேயே மெல்லச் சாய்த்துப் படுக்க வைத்தான்.

அவருடைய தொப்பியைத் தன் தலையில் பொருத்திக் கொண்டான். நிலைக் கண்ணாடி பிரதிபலித்த தன் உருவத்திற்கு உற்சாகமாக சல்யூட் வைத்து 'ஹலோ ஏசிபி' என்றான்.

ஹோட்டல் பார்க்கிங்கிலிருந்த புல்லட்டின் பில்லியனில் பணப் பெட்டியைப் பிணைத்துக் கட்டியபின் உதைத்துக் கிளப்பினான் பிரகாஷ்.

கேட்டிலிருந்த இரு கான்ஸ்டபிள்களும் பைக்கைக் கண்டதும் அதி அவசரமாக விறைப்புக்கு வந்து சல்யூட் அடித்தார்கள்.

குளிர் இருளில் புல்லட் விரைய பரபரப்பையும் மீறி அவனுள் ஒரு வித்தியாச உணர்வு ஊற்றெடுத்தது. போலீஸ் மூக்கடி



திருடன் : நீங்கதான் லஞ்சம் வாங்கி மாட்டிக்கிட்டு சஸ்பென்ஷன்ல இருக்கீங்களே, இப்ப ஏன் சார் மாமூல் கேக்கறீங்க?

போலீஸ் : சஸ்பென்ஷன்ல இருக்கும்போது பாதி சம்பளம் உண்டு... தெரியுமில்லே....? எடு, பாதி மாமூலை!

- சீர்காழி வி. ரேவதி



# நல்ல அம்மாவுக்கு நல்லாத் தெரியுமே!

அம்மாவுக்குத் தெரியுமே ....



வளரும் பிள்ளைகளுக்கு வலிமை தரும் புரதச்சத்துடைய உணவு தான் தேவையென்று. வலிமை தரும் உணவுக்கு சோயாதான் சரியான மூலமென்றும் அம்மாவுக்குத் தெரியும். அதனால்தான், அவரின் தினசரி சமையலில் ''விகர்'' தவிர்க்க முடியாததாகி விடுகிறது. சமையலில் 10-15% ''விகர்'' கலந்தால் போதும். மொத்த உணவுமே சத்துணவாகிறது.



சப்பாத்தி, பூரி, இட்லி தோசை போன்றவற்றுக்கு மட்டுமின்றி ஜிலேபி , பக்கோடா போன்றவற்றுக்கும் ''விகர்'' உன்னதமான கலவையாகத் திகழ்கிறது.

**''விகர்''**
**ஒவ்வொருவருக்கும் உகந்த உணவு**

விளையாட்டு வீரர்களுக்கு, ''விகர்'', வலிமையை சேமித்து வெற்றியினைத் தருகிறது.



தாய்மை நிலையிலுள்ள பாவையருக்கு, ஊட்டச்சத்து மிகுந்த உணவாய்த் திகழ்கிறது. நீரிழிவு நோயாளிகளுக்கு உணவு முறையை சமப்படுத்தி உறுதுணை புரிகிறது.

**சக்தி சோயாஸின்**
**''விகர்''**

ஜெர்மனி மற்றும் சுவிட்சர்லாந்தின் தொழில் நுட்ப உதவியோடு, தரமுயர்ந்த சோயாபீனில் தயாராகி வருகிறது ''விகர்''

**உன்னதமான உணவுக்கலவை**




100%
சைவ உணவு
50%
புரதச்சத்து



விகர் அம்மா... நல்ல அம்மா!

சக்தியின் தயாரிப்பு

SASI / 13 / 92

யிலேயே நிகழ்த்தும் சாகசத்தில் ஒரு த்ரில் இருக்கத்தான் செய்கிறது. இந்நாள் வரை அனுபவித்தறியாத பரவசம் இது.....

இறக்கத்தில் ஐந்தாவது கிலோ மீட்டரில் ஆளரவமற்ற பிரதேசத்தில் சாத்தியிருந்த ஒரு பாழடைந்த கோயில் வாசலில் பெட்டி வைத்துவிட்டு அவசர அவசரமாக அவன் அறைக்குத் திரும்பியபோது -

தேவதேவன் விழித்துக் கொண்டிருந்தார். அப்போதுதான் விழித்திருப்பார் போலும், களைப்பான கண்களால் இவன் உடுப்பைப் பார்த்தார். அவருக்கு விஷயம் புரிந்து விட்டது என்பது அவர் முகபாவத்திலேயே தெரிந்தது. அவன் சென்று திரும்ப அரைமணிதான் ஆகியிருந்தது. அதற்குள் அவர் தெளிந்துவிட்டிருந்தது ஆச்சரியம் தான்.

''சாரி சார். எனக்கு வேறு வழி தெரியலை... பத்து லட்சம் கலபம் எனக்கு. போலீஸ் கிட்டச் சொன்னா சிந்துஜாவைக் கொன்னுருவேன்னு சொன்னான். நான் எப்படி ரிஸ்க் எடுக்க முடியும் சொல்லுங்க....?''

''தப்பு பண்ணிட்டிங்க பிரகாஷ்! நீங்க ஒரு செல்வந்தரோட மகன்; பொன் முட்டையிடும் வாத்து. பத்து லட்சத்தோட சிந்துஜாவை விட்டு விட டான் கலிலியோ ஒன்றும் முட்டாளில்லை. திரும்பத் திரும்ப அணுகுவான் பாருங்க.''

கோபப்படுவார் என்று எதிர்பார்த்ததற்கு மாறாக அவரின் ஸ்னேகமான குரல் பிரகாஷைக் குழப்பியது.

அவனைத் தம் உடையில் பார்த்ததும் தேவதேவனுக்கு முதலில் கோபம் வந்தது உண்மைதான். ஆயினும், அவன் மனைவி கடத்தப்பட்டுள்ளதை நினைத்துப் பார்த்து அடக்கிக் கொண்டார். மேலும் - சிந்துஜாவைக் கடத்தியவன்தான் அவர் குறி; குற்றவாளியைப் பிடிக்கப் பிரகாஷின் ஒத்துழைப்பும் தேவை என்று கணக்கிட்டார்.

''போலீஸை எப்பவும் குறைச்சு மதிப்பிடாதீங்க பிரகாஷ். சின்சியரா உங்களுக்கு உதவத்தான் நாங்க இருக்கோம். உங்களால அந்தக் கிரிமினலைத் தனியா ஹாண்டில் செய்ய முடியாது. ஸோ, அடுத்த தடவை அவன் தொடர்பு கொள்றப்போ எனக்கு இன்ஃபார்ம் பண்ண மறக்காதீங்க.''

**பா**ரிலிருந்து விடுபட்டு பத்து மணி அளவில் வந்த ராஜசேகர் விஷயம் கேள்விப்பட்டு மகிழ்ச்சியாகி, ''இனி கவலையில்லைடா. காலையில சிந்துஜா வந்துருவா பாரு,'' என்றார்.

அப்போது போன் ஒலித்தது. எடுத்துக் கேட்டு விட்டு வைத்த ராஜசேகர் மேலும் பரவசமாகி, ''ஒரு முக்கியமான காண்ட்ராக்ட் படிஞ்சிருக்கப்பா! எல்லாம் என் மருமக திரும்பற நேரம் பாரு! கையெ முத்திட நாளை அதிகாலையில நான் மெட்ராஸ் கிளம்பணும். அந்த ஃபாரினர் நாளைக்கே திரும்பிடறானாம்.''

படபடப்பு-பயம்-மகிழ்ச்சி-கவலை அனைத்து உணர்வுகளும் அதீதமாக இருந்ததில் இரவு முழுவதும் பிரகாஷுக்கு உறக்கம் வரவில்லை.

வியாழன் அதிகாலை ஆறுமணி அளவில் ராஜசேகர் கிளம்பினார். காண்ட்ராக்ட்

## சுகமான

**இ**மயத்தின் பாரமாய் அழுத்தும் சோகமான கனைகள்...
(தொடக்கத்திலேயே தலைப்பை என்னதான் நியாயப்படுத்தினாலும்!)

அந்த அழுத்தத்தின் விளைவுகள் மகாமக நெரிசலாய் அந்தக் குடும்பத்தின் ஒவ்வொருவரையும் சூழ்ந்து மூச்சுத் திணறச் செய்ய -

அவர்களைக் காப்பாற்ற பார்த்திபன் எழுப்ப முயலும் பாதுகாப்புச் சுவர் விரிசல் கண்டு உடைந்து சிதற.....

துயரங்கள் - மேலும் துயரங்கள் என்று கதாசிரியர் அடுக்கடுக்காய்ச் சோகவலையைப் பின்னிக் கொண்டே போக, முடிவில் அதில் சிக்குண்டு திணறிப் போவது கதை மட்டுமல்ல - அவரும்தான். (கதை, திரைக்கதை, வசனம், இயக்கம் : பார்த்திபன்.)

இந்தச் சோகக் கோடையின் தீவிர வெப்பத்தை இனியும் தாங்க முடியாது என்று தோன்றும் தருணங்களில் எல்லாம் குளிர் தருவாய் இளைப்பாறுதலுக்கு வழிவகுத்துக் கொடுப்பவர்கள் :

1. கிளி கொஞ்சும் மழலைப் பேச்சுடன் தந்தச் சிலையாய் நடமாடும் பேபி ஸ்ரீதேவி ('ரிக்‌ஷா மாமா'வில் அறிமுகமான நட்சத்திர வாரிசு.)

2. 'உலகம் எக்கேடு கெட்டால் என்ன, எனக்கு என் காரியமே குறி' என்கிற ரீதியில் எல்ஐசி பாலிசியை எவர் தலையில் கட்டலாம் என மோபெட்டில் அலைந்து திரியும் ஷாலி. (மிளகாய் பஜ்ஜியாய் உறைக்கும் பளிச் பளிச் வசனங்கள்.)

# சுமைகள்



3. பத்து வார்த்தைகளே பேசினாலும் படபடவெனப் பொரிந்து தள்ளும் பூர்ணம் விஸ்வநாதன். (வசனமே இல்லாமல் ஒரு கருத்தை எவ்வாறு வெளிப்படுத்தலாம் என்றும் அவர் நடித்துக் காட்டும் விதம் அட்டகாசம்.)

'ஆத்மா அமைதி இயக்கம்' என்கிற போர்வையில் நடமாடும் பயங்கரவாதிகள் கூட்டம், அவ்வப்போது பயன்படுத்தப்படும் ஏகே 47, உச்ச கட்டத்தில் ஓர் உயிரைப் பலி கொள்ள மனித குண்டு இத்யாதி அண்மைக்கால நாட்டு நடப்புகளின் பிரதிபலிப்புகள். இவற்றின் பின்னணியில் சூத்ரதாரியாக அமர்த்தல் நடைபோடுகிறவர் ராதாரவி. (மீண்டும் ஒரு 'அமரன்'?)

சென்னை நகரின் சந்தடி நிறைந்த போக்குவரத்து நெரிசல்களின் மத்தியில் இடம் பெறும் ஆடல், பாடல், ஓடல், சாடல் போன்றவை மசாலா ரசிகர்களுக்கு வேட்டை.

துயரங்களின் சுமையை வலியுறுத்த வேண்டும் என்பதற்காகவே நிகழ்ச்சிகளை மிகைப்படுத்திக் கொண்டே போய், அதன் தொடர்ச்சியாகக் கதாநாயகனுக்கு ரத்தப் புற்று நோயைப் புகுத்தி அவன் உயிருக்கு ஆறு மாத கெடுவிதித்து, வேறு வழியே இல்லாமல் ஒரு சோக முடிவுக்கு அடித்தளம் அமைத்துவிட்டதில் கதாசிரியர் விட்டிருப்பது கோட்டை.

– சி. ஆர். கே.

அவசரமென்றார். இவர்களின் ஹனி மூனின் குறுக்கே தாம் எதற்கு என்று சிரித்தார். மீதி இருந்த பத்து லட்சத்தில் ஒரு சில நோட்டுக் கட்டுகளை எடுத்துக் கொடுத்து, 'என்ஜாய் யுவர் செல்ஃப். பரிசு வாங்கிக் கொடுத்து மனைவியைச் சந்தோஷப் படுத்து' என்று கண்ணடித்தார். அவனுடைய காரை மறுத்துவிட்டு டாக்சி பிடித்துப் புறப்பட்டார்.

அவசரமாகக் குளித்து முடித்து சிந்துஜாவிற்குப் பிடித்த உடைகளை அணிந்து கொண்டு பரபரப்பாகக் காத்திருந்தான் பிரகாஷ். அவனுள் ஆயிரம் ஆர்வ ஒத்திகைகள்; ஆருயிர் வந்ததும்....

எட்டரையாகிவிட்டது. சிந்துஜா இன்னமும் வரவில்லை. படபடப்புத் தாங்காமல் ரிசப்ஷனுக்குச் சென்று வாசலையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தான் - வெகு நேரம்...

சிந்துஜா வரவே இல்லை. மாறாக, மாலை அவனைக் கடத்தியவனிடமிருந்து போன் வந்தது....!

(தொடரும்)

"ஏம்பா செல்வராஜ் இன்னிக்குக் கேண்டீன்ல சூடா என்ன போட்டுருக் கான்?" குருமூர்த்தி பியூன் செல்வராஜைக் கூப்பிட்டுக் கேட்டான்.

"மெது பக்கோடா சார்! வேணுமா? வாங்கியார்ட்டா?" செல்வராஜ் குருமூர்த்தி யிடம் சொல்லிக் கொண்டிருந்தபோதே, பக்கத்து சீட்டில் உட்கார்ந்திருந்த அருணா சலத்திற்கு வாயில் சொற்ப டி.எம்.சி அளவு எச்சில் ஊறியது. அதை அடக்கு அடக்கு என்று அவருள் எச்சரிக்கை எழுந்தது. தனக்கும் ஒரு மெது பக்கோடா வாங்கிவரச் சொல்லி விடுவார்தான் அருணாசலம். இருந்தாலும் இந்தப் பாழாய்ப்போன பில் கிளார்க் ஜெயபாண்டியன் பார்வையில் அது பட்டுவிட்டால் என்ன செய்வது என்று பயந்தார்.

கடம் போன்று காத்திரமுடன் வழு வழுப்பாக அமைந்திருந்த அருணாசலத் தின் அடிவயிற்றிலிருந்து ஒரு ஆதங்கமான பெருமூச்சு வெளிவந்தது. இருபது நாட்க ளாக அவர் நாக்கு செத்துப் போயிருந்தது. எத்தனை உற்சாகமாக அதற்கு ஓயாமல் வேலை கொடுத்திருக்கிறார் அருணாசலம்! காலையில் டிபன் காப்பி சாப்பிட்ட வாயோடு ஆபீஸ் கிளம்பினாரானால், பஸ் ஸ்டாப் பெட்டிக் கடையில் ஒரு பலகை அளவு கடலை பர்பியை வாங்கிக் கொள்வார். பஸ்ஸின் இடிபாடுகள் நடுவே அவர் பல்லின் இடிபாடுகளில் பர்பி பாடு படும். ஆபீஸ் போனதும் டேபிள் டிராய ரைத்திறந்து அதில் எப்போதும் ஸ்டாக் வைத்திருக்கும் பொன்னிற கோதுமையால் செய்யப்பட்ட மொறுமொறு பிஸ்கட் இரண்டுடன் வேலையை (வாயின்?) ஆரம் பிப்பார். உடனே பத்தரைமணிக்குத் தயிர் வடை அல்லது தனி வடையுடன் கேண் டீனில் டீ. திரும்பிப் பார்த்தால் டிபன் காரியர் சாப்பாடு; அதற்குத் தொட்டுக் கொள்ள அன்றைய காண்டீன் ஸ்பெஷல். மீதமுள்ள ஆபீஸ் நேரத்தில் மிக்சரும், பஜ்ஜியும் விழுங்கியிருந்தாலும் வீடு திரும் பும் போது ஆனந்தபவனில் நுழைந்து ஒரு அடை அவியல் சாப்பிடாவிட்டால் அருணாசலத்திற்குச் சரிப்படாது. இது போதாதென்று வீட்டுக்கு லேட்டா போனா, ஸ்வீட்டோட தான் போகணும் என்ற விளம்பர மந்திரத்தை விடேன் தொடேன் என்று கடைப்பிடிப்பார்.

வீட்டில், இவர் சங்கடப்படக்கூடாதே என்று சம்படங்களில் முறுக்கு, சீடை, சிப்ஸ் என்று அவருடைய சம்சாரம் அடைத்து வைத்திருந்தாலும் விடுமுறை நாட்களில் இதைச் செய் அதைச் செய் என்று அவளைச் சமையலறையிலேயே அடைத்து வைக்கும் நிலையை உண்டாக்கிவிடுவார் அருணாசலம்.

இப்படி, நொறுங்கத் தின்றால் நூறு வயது என்பதை தவறாகப்புரிந்து கொண்டு, நொறுக்குத் தீனியை விடாமல் தின்று கொண்டிருந்தவர் சமீபகாலமாக இந்த நாயும் வாலை ஆட்டுமா என்பதுபோல் நாவை அடக்கி வாசித்துக் கொண்டிருந் தார். இதற்குக் காரணம் ஜெய பாண்டிய னின் ஹார்ட் உபத்திரவம்.

ஜெய பாண்டியனின் ஹார்ட் உபத் திரவத்திற்கும் அருணாசலத்தின் பயத்திற் கும் சம்பந்தம் இருந்தது. இரண்டு மாதங் களுக்கு முன் ஜெயபாண்டியனுக்கு 'மைல்ட் ஹார்ட் அட்டாக்' வந்தது. மருத் துவ விடுப்பிலிருந்துவிட்டு வேலைக்குச் சேர்ந்தவர் அருணாசலத்திடம் பீதியைக் கிளப்பினார்.

"யோவ் அருணாசலம், கொஞ்சம் தீனி யைக் குறைச்சு சாப்பிடய்யா உன்னை மாதிரி தின்னு தின்னுதான் எனக்கு ஹார்ட் டிரபிள் வந்தது. கண்ட கண்ட ஆயில்ல செய்றதையெல்லாம் தின்னதாலதான்

# அருணாசலத்தின் அச்சம்!

அகிலா கார்த்திகேயன்



ஹார்ட் அட்டாக் வந்ததுன்னு டாக்டர் சொல்றாரு... நாக்கை அடக்கணும் ஜாக்கிரதை!''

இது போதாதென்று இவர் வீட்டிற்கே ஒரு நாள் வந்து, அருணாசலத்தின் சம்சாரம் ராதாபாயிடம் மேற்படி சமாசாரத்தைச் சொல்லிவிட்டுச் சென்றார். அன்றையிலிருந்து ராதாபாய்க்குப் பயம் பேயாகப் பிடித்துக் கொண்டது.

ஏற்கெனவே வாய்வு உபாதை அருணாசலத்தை உண்டு இல்லையெனப் பண்ணிக் கொண்டிருந்தது. அருணாசலம் அவஸ்தைப்படும் போதெல்லாம், ராதாபாய்க்கு அதைவிட அவஸ்த்தையாய் இருக்கும்.

நட்ட நடு இரவில் அவளை எழுப்பி நடு முதுகில் சுக்கை அரைத்துப் பூசச் சொல்வார். ஒரிஜினல் தென்னைமரக்குடி எண்ணெய்களை விட்டு நீவச் சொல்வார். இரவில் அவர் சாப்பிட்ட 'எண்ணெய் மொடாக்குடி' பதார்த்தங்களால் வீர்யம் பெற்ற வாய்வு எந்த உபாயத்திலும் தன் உபாதையை விட்டுக்கொடுக்காது.

''அப்படி என்ன நாக்கோ உங்களுக்கு... ராத்திரி உருளைக்கிழங்கு கறி பண்ணிச் சாப்பிட்டாத்தான் ஆச்சுன்னு அடம் பிடிக்கறேள்'' என்று திட்டிக் கொண்டே கைகால்களைப் பிடித்து விடுவாள் ராதாபாய்.

இப்படி குடைச்சல் மூச்சுப்பிடிப்பு ஆகியவை உச்சகட்டத்தை அடைய வே அருணாசலம் டாக்டரிடம் வர ஒப்புக் கொண்டார். ஆயுர் வேதத்தில் ஆரம்பித்து, அலோபதி, ஹோமியோபதி மற்றும் மாமனார் பசுபதி சிபாரிசு செய்த சீதாபதி சித்த மருத்துவம் என்று உலகிலுள்ள மொத்த மருத்துவத்தையும் பார்த்துவிட்டார். மருந்தும் மாயமும் எந்த ஜாலத்தையும் செய்ய இயலாமல் தவித்தன.

யாரோ இயற்கை வைத்தியம் என்று சிபாரிசு செய்து, இவரைக் கூப்பிட்டுப் போனார்கள். ஆனானப்பட்ட பாரிசவாயுவையெல்லாம் ஓட்டிய வைத்தியர் அவர். அருணாசலத்திற்கு உடம்பெல்லாம் களி மண் பூசி ஒரு மணிநேரம் உட்கார வைத்தார். அருணாசலமும் பொறுத்துக் கொண்டார். மண் சிலையாய் உட்கார்ந்திருந்தவரிடம் வைத்தியர் அரைப்படி அருகம்புல் சாறைப் பிழிந்து விழுங்கச் சொல்லவே விழுந்தடித்துக் கொண்டு வீட்டிற்கு ஓடினார். களிமண் கோலமாய் ஓடிய அருணாசலத்தை எல்லைக் காவல் தெய்வம் எழுந்து நடமாடுவதாக எண்ணி ஊரில் ஏகப்பட்ட கலாட்டாவாகிவிட்டது.

சரி, மருத்துவமே வேண்டாம். உடற்பயிற்சியால் உபாதை குறையுமா என்ற நைப்பாசையில், காலை வேளையில் அரைடிராயருடன் ஜாக்கிங் செய்தார். ஆசனம் போட்டார். காலனியின் மகளிர் சங்கம் அதை விடுவதாயில்லை. இவர் இப்படி அரையும் குறையுமாக ஆடையணிந்து அதி

காலையில் தரிசனம் தருவதை ஆட்சேபித்து ஆர்ப்பாட்டம் செய்யவே அதையும் விட்டு விட்டார், பாவம்.

இப்படித் தவித்துக் கொண்டிருந்த அருணாசலத்தின் மனம், ஜெயபாண்டிய னுக்கு வந்த இலேசான இதயத்தாக்குதலால் பலமாகத் தாக்கப்பட்டது. இதுதான் தக்க தருணமென்று ராதாபாயும் தன் பங்கிற்கு, இவரிடம் இல்லாத பொல்லாத பாரங் களையும் பீதிகளையும் எடுத்துவிட்டதில், அருணாசலம் நாக்குக் கட்டுப்பாட்டிற்கு ஒரு வழியாக இணங்க வேண்டியதாயிற்று.

ராதாபாய் காலையில் இரண்டாம்தரம் இவர் குடிக்கும் காப்பியைக் குறைத்தாள். இட்லியின் அளவு மற்றும் எண்ணிக்கை களைக் குறைத்தாள். சமையலில் எண்ணெ யைக் குறைத்தாள். உப்பு, காரம், காணாத வரட்டு சமாசாரங்களைச் சமைத்துச் சாக டிக்க ஆரம்பித்தாள். வெளியே எங்காவது ஓட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டுத் தொலைக்காமலிருக்க பாக்கெட் பணத்தை பஸ்சார்ஜ் அளவுக்கு மட்டும் கொடுத்து நோகடித்தாள்.

ஜெயபாண்டியனோ, உலகத்தின் உச்ச கட்ட வியாதிகளான கான்சர், இதயநோய், எய்ட்ஸ் இத்யாதிகளுக்கெல்லாம் வாய் தான் காரணமென்று அபாண்டமாகப் பழி சுமத்தி இவரைப் பழிவாங்கிக் கொண் டிருந்தார்.

மேற்படி பிளாஷ்பேக் காரணங் களால்தான் அருணாசலத்தின் அடிமனத் தில் மெதுபக்கோடா என்றவுடன் பொது வாக எழக்கூடிய சபலம் எட்டிப் பார்க்கத் தயங்கியது.

ஆபீஸில் எல்லோரும் பகல் நேரச் சாப்பாடு டப்பாக்களைத் திறந்து கொண்டு உட்கார்ந்தார்கள். செல்வராஜ் கான்டீனி லிருந்து வாங்கிவந்த தயிர்சாதத்தையும் மெதுபக்கோடா பொட்டலத் தையும் விரித்து வைத்துக் கொண்டு குரு மூர்த்தி சாப்பிடத் தொடங்கினான். அதைப் பார்த்ததும் காவேரியாய்ப் பெருக்கெடுக்க ஆரம்பித்த எச்சிலை அருணாசலம் அடக் கிக் கொண்டார். தன் டிபன் டப்பாவில், ராதாபாய் வைத்திருந்த உப்புசப்பில்லாத கோதுமை ரவை சாதத்தைக் கோபமாய் நோக்கினார்.

''சே... வர வர நம்ப கான்டீன் தயிர் சாதம் சொதப்பலா போச்சி. வாயிலே வைக்க வழங்கல'' குருமூர்த்தி எரிச்சல் பட்டுக் கொண்டே சாப்பிட்டான். பக் கோடா பற்றி மூச்சு விடவில்லை. ஒரு வேளை நன்றாய் இருக்கிறது போலும்.

''சீக்கிரம் ஒரு கல்யாணத்தைப் பண் ணிக்கய்யா... நீயும் ஹோட்டல்லே சாப் பிட்டு எங்களை மாதிரி உடம்பைக் கெடுத் துக்காதே. விலைவாசி எல்லாம் அதிகமா இருக்கிறப்ப கான்டீன்காரன் என்ன பண்ணுவான் பாவம்!'' ஜெயபாண்டியன் குருமூர்த்தியை நோக்கிச் சொல்லிக் கொண் டிருந்தார்.

''அட போங்க சார் நீங்க ஒண்ணு. எங்க ஏரியாவிலே ஒரு ஹோட்டல் புதுசா திறந்

## அருள்வாக்கு



மீநாக்ஷியின் அம்ருத கடாக்ஷம் படுகிற இடமெல்லாம் மதுரமாகிறது. மதுரத்துக்கு, இனிமைச் சுவைக்கு, பெயர் போனது அம்ருதம்தானே? ஜீவஜந்துக்கள் மதுரம் ஆவது என்றால் என்ன? அன்பு மயமாவது என்றுதான் அர்த்தம். பரி பூர்ணத்வம் அடைவதே ஜீவனுக்கு மதுரம். கட்டைக் காங்காய், கடைசியில் பக்குவமாகிற போது, கனிந்து மதுர மாவது போல், அநேக துர்க்குணங்கள் கொண்ட நாம் கனிந்து மாறிக்கொண்டே போய்ப் பக்குவமாகிப் பெறுகிற பூர்ண நிலைதான் நமக்கு மதுரம். அப்படிப்பட்ட பூர்ணத்வ மதுரத்தை நமக்குத் தருவது மீநாம்பிகையின் கடைக்கண். லோகத்தில் இருக்கிறபோதே நிறைவைத் தந்து, அப்புறம் இந்த லோகம், ஸம்ஸார, பாசம் இல்லாமல் மோக்ஷானந்தம் தரு கிறது....

....இப்படி ஜீவனுக்குப் பூர்ணத்வம் என்ற மதுரத்தைத் தரும் மீநாக்ஷியின் மதுரகடாக்ஷம் விசேஷமாகப் பரவி யிருப்பதால்தான் அவளுடைய க்ஷேத்ரத்துக்கே மதுரை என்று பெயர் இருக்கிறது. அம்பாளின் கடைக்கண் அமுது அலை அலையாகப் பரவியிருப்பதால் அது மதுரையாகிறது.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

இருக்கான். ரொம்ப சின்னதுதான். 'மணீஸ் கேப்'னு பழையபேர் வைச்சிருக்கான். டிபன் எல்லாம் அத்தனை ஜோர்! ஒரு மசால் தோசை போடறான் பாருங்க, பிச்சிட்டுப் போகுது......! மொறு மொறுன்னு ரொம்ப பதமா, தொட்டுக்க மூணு வரைட்டி சட்னி போடறான். பட்டாணி, காலிபிளவர் போட்டு மசாலா. அதுக்கே காசு கொடுக்கலாம் போங்க. சாயங்காலம் ஏழு மணிக்கே தீந்து போயிடுதுன்னா பாருங்களேன். அவனுக்கு மட்டும் எப்ப டிங்க கட்டுப்படியாகுது?'' குருமூர்த்தி பேசிக் கொண்டே பாதி தயிர் சாதத்தை அப்படியே எடுத்து எறிந்துவிட்டுக் கை அலம்பிக் கொண்டார்.

அருணாசலமும் எரிச்சலுடன் தன் பசையற்ற கோதுமை ரவை பண்டத்தில் பாதியைத் தூக்கி எறிந்தவராய்க் குருமூர்த்தியைக் கேட்டார்.. ''குருமூர்த்தி, உன் ரூம் எந்த ஏரியான்னு சொன்னே?''

''விஜய நகர் சார். அரிசிப்பாளையம் பஸ் ஸ்டாப்பிலிருந்து அரை பர்லாங் நடக்கணும். ஏன் சார் கேட்கறீங்க? மணீஸ் கேப் வர்றீங்களா?'' சந்தேகமாய்க் கேட்டான் குருமூர்த்தி.

''சே சே.... நீ ஒண்ணு... சும்மாதாம்பா கேட்டேன்'' அருணாசலம் பொய் சொன்னார். இருபது நாட்களாக வழ வழ கொழ கொழாவென்று சாப்பிட்டுக் கொண்டிருந்தவரை மணீஸ் கேப் தோசை வா வா என்றது. மனத்தில் ஒரு தீர்மானம் செய்து கொண்டார்.

ஜெயபாண்டியனைப் பார்த்தார். சுத்த கிழம்! ராகியில் கூழ்போன்ற எதையோ உறிஞ்சிக் கொண்டிருந்தார். நல்ல காலம் குருமூர்த்தியிடம் தான் பேசியதை அவர் கேட்கவில்லை என்று அருணாசலம் நினைத்துக் கொண்டார். கேட்டிருந்தால் தான் சபலப்படுவதை மோப்பம் பிடித்து விடுவார். மசால் தோசையால் விளையக் கூடிய ஆபத்து என்று இல்லாத பொல்லாததைக் கூறி, பயமுறுத்தல் பிரசங்கம் செய்து தொலைப்பார்.

இன்று எப்படியும் அரிசிப்பாளையம் மணீஸ் கேப் மசால் தோசையை அனுபவித்தே தீர்வது என்று ஆசை நிறைந்த மனத்தோடு ஆபீஸ் நேரம் ஓடியது. தினமும் தன்னுடனேயே பஸ்ஸில் வீடு திரும்பும் ஜெயபாண்டியனை எப்படி தவிர்ப்பது; அவரிடமிருந்து எப்படி தப்பிப்பது என்று யோசனை செய்தபடி உட்கார்ந்திருந்தார். ரங்கநாதனிடம் கைமாத்தாகப் பதினைந்து ரூபாய் வாங்கிக் கொண்டார்.

நல்ல வேளையாக ஜெயபாண்டியன் அவர் வீட்டில் ஏதோ விசேஷமென்று



''என்னது? சிக்கன நடவடிக்கை காரணமாத்தான் நீ ஹோம்ஒர்க் செய்ய லியா?''

''எஸ் சார்! பால்பாயிண்ட் பேனா முனை தேய்மான செலவைக் குறைக்க லாம்னுதான்.''

- சுதர்ஸன்

சொல்லிவிட்டு அரைமணி நேரம் முன்னதாகவே ஆபீஸிலிருந்து போய் விட்டதால் அருணாசலத்திற்கு ஏக குஷியாகிவிட்டது. ஆபீஸ் விட்டதும் அரிசிப்பாளையம் பஸ்ஸில் ஏறினார்.

மணீஸ் கேப் ஹோட்டலைக் கண்டு பிடிப்பதில் அவ்வளவு சிரமம் தெரியவில்லை. மசால்தோசை மனத்தில் ஏற்படுத்திய மயக்கத்துடன் வாஷ்பேசினில் கையைக் கழுவிக் கொண்டு ஓடோடி வந்து கிடைத்த இடத்தில் உட்கார்ந்தார்.

ஆண்டவா தோசை தீர்ந்து போகாமலிருக்க வேண்டும்.

நாக்கைச் சப்பு கொட்டியபடி சர்வர் வருகைக்குக் காத்திருந்தவர், எதிரே வேறு டேபிளில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவரைப் பார்த்தார். தூக்கிவாரிப் போட்டது. தன்னைச் சுற்றி என்ன ஏது என்று கவலைப்படாதவராய் அந்த மசால் தோசையின் மீதிக் துகள்களை ஒன்று விடாமல் திரட்டி வாயில் திணித்துக் கொண்டிருந்தார் - ஜெயபாண்டியன்!

''முறுவலா ஒரு மசாலா'' அச்சம் தவிர்த்து சர்வரிடம் ஆர்டர் கொடுத்தார் அருணாசலம்.

# சிவகாமியின் சபதம்

## நாற்பத்தாறாம் அத்தியாயம்
## வாதாபி

வடபெண்ணைக் கரையிலிருந்து சளுக்க சைனியத்தின் பெரும் பகுதி வடமேற்குத் திசையாக வாதாபி நகரத்தை நோக்கிக் கிளம்பிற்று.

சிவகாமியும் அந்தச் சைனியத்துடன் பிரயாணம் செய்தாள்.

தொண்டை மண்டலத்துக் கிராமங்களிலே பார்த்த பயங்கரங்களைக் காட்டிலும் கொடுமையான காட்சிகளைப் பார்த்துக் கொண்டு போனாள். வீடுகளும் வைக்கோற் போர்களும் பற்றி எரிவதையும், பசுமையான தோப்புக்கள் போர் யானைகளால் அழிக்கப்படுவதையும், பயிர்கள் நாசமாக்கப்படுவதையும் பார்த்துக் கொண்டு போனாள். குற்றமற்ற கிராமத்து ஜனங்கள் கொல்லப்படுவதையும், திடகாத்திர புருஷர்களும் இளம் வயதுப் பெண்களும் சிறைப்பிடிக்கப்படுவதையும், தாய்மாரைப் பிரிந்த குழந்தைகள் அலறி அழுவதையும் பார்த்துக் கொண்டு போனாள்.

சிவகாமியின் உள்ளத்திலும் பெரிய தீப்பிழம்பு ஜுவாலை விட்டு எரியத் தொடங்கியது.

வாதாபிச் சக்கரவர்த்தியை மீண்டும் சந்தித்து இம்மாதிரி அக்கிரமக் கொடுமைகளைச் செய்ய வேண்டாமென்று வேண்டிக் கொள்ள விரும்பினாள். பல தடவை அதற்காகப் பிரயத்தனம் செய்தாள். தன்னுடன் வந்த காவலர்களைத் தன்னைப் புலிகேசியிடம் அழைத்துப் போகும்படி கேட்டுக் கொண்டாள். அந்தக் காவலர்கள் அவள் கூறியதைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை.

ஒவ்வொரு சமயம் அவள் இரவில் தூங்கும் போது, 'ஹ ஹா ஹா' என்று பேய் சிரிப்பது போன்ற சிரிப்புச் சப்தம் கேட்கும். திடுக்கிட்டுக் கண்ணை விழித்துப் பார்ப்பாள். எதிரே சற்றுத் தூரத்திலிருந்து வாதாபிச் சக்கரவர்த்தியின் உருவம் திரும்பிப் போவது போலத் தோன்றும். எழுந்து உட்காருவதற்குள் அந்த உருவம் மறைந்து போய் விடும். தன்னுடைய சித்தப் பிரமையில் தோன்றிய உருவந்தான் அது என்று எண்ணிக் கொள்வாள்.

புலிகேசி இளம் பிராயத்தில் சிற்றப்பன் மங்களேசனால் பெரிதும் கொடுமை செய்யப்பட்டவன். அதன் காரணமாக, மரத்திலே வைரம் பாய்வது போல் அவனுடைய சுபாவத்திலேயே குரூரம் கலந்து இறுகிக் கெட்டிப்பட்டிருந்தது.

நாகநந்தியின் உதவியால் வாதாபிச் சிம்மாசனம் ஏறிய காலத்திலிருந்து உள்நாட்டு எதிரிகளை ஒழித்தல், வெளிப் பகைவர்களோடு யுத்தம் செய்தல் முதலிய கொடுங் காரியங்களிலேயே புலிகேசியின் வாழ்நாளெல்லாம் சென்றிருந்தது.

பிறருடைய துன்பங்களைப் பார்த்து வருந்துவது என்பது புலிகேசியின் சுபாவத்தில் இல்லவே இல்லை.

தற்சமயம், புலிகேசியின் சுபாவக் குரூரத்தை ஒன்றுக்குப் பத்தாக வளரச் செய்த காரணங்கள் இரண்டு ஏற்பட்டிருந்தன.

ஒன்று, மகேந்திர பல்லவனுடைய

மாய தந்திரங்களினால் தம்முடைய தென்னாட்டுப் படையெடுப்பு அபஜயமாக முடிந்ததில் ஏற்பட்டிருந்த ஆசாபங்கம்.

இன்னொன்று, இதுகாறும் வாதாபி இராஜ்யத்தின் பெருமையையும் தம்முடைய க்ஷேமத்தையும் தவிர வேறு கவனமே இல்லாமலிருந்த நாகநந்தியடிகளின் உள்ளத்தை ஒரு பல்லவ நாட்டுப் பெண் கவர்ந்து விட்டாளே என்ற அசூயையும் ஆத்திரமும்.

இக் காரணங்களினால் தம் உள்ளத்தில் கொழுந்துவிட்டெரிந்த குரோதத்தையெல்லாம் புலிகேசிச் சக்கரவர்த்தி தாம் சென்ற மார்க்கத்தில் எதிர்ப்பட்ட குற்றமற்ற ஜனங்கள் மீது காட்டினார்.

அதனோடு, சிவகாமியின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்கும் தக்க வழியை யோசித்துக் கொண்டிருந்தார்.

இதையெல்லாம் அறிந்திராத சிவகாமி, தான் மட்டும் வாதாபிச் சக்கரவர்த்தியை இன்னொரு தடவை நேருக்கு நேர் சந்திக்க முடிந்தால், அவருடைய படைகள் செய்யும் கொடுமைகளையெல்லாம் நிறுத்தி விடலாம் என்று ஆசையுடன் நம்பினாள். அவளுடைய இந்த மனோரதம் வாதாபி போய்ச் சேரும்வரையில் நிறைவேறவில்லை.

**வா**தாபியில் பெரியதோர் அழகான அரண்மனையில் சிவகாமி கொண்டு வந்து சேர்க்கப்பட்டாள். அவளுக்குத் துணையாகவும், பணிவிடை புரிவதற்காகவும் இரண்டு தாதிப் பெண்கள் அமர்த்தப்பட்டார்கள். அவர்கள் பிராகிருதமும் தமிழும் கலந்த பாஷையில் பேசினார்கள். அந்தத் தாதிப் பெண்களுடைய பேச்சையெல்லாம் சிவகாமி எளிதில் புரிந்து கொள்ளுதல் சாத்தியமாயிருந்தது.

சக்கரவர்த்தி கட்டளையின் பேரிலேயே அந்த அரண்மனை சிவகாமிக்காகத் திட்டம் செய்யப்பட்டதென்றும், அவளுக்கு யாதொரு சௌகரியக் குறைவும் இல்லாதபடி பார்த்துக் கொள்ளும்படி ஆக்ஞை என்றும் மேற்படி தாதிப் பெண்களிடம் சிவகாமி தெரிந்து கொண்டாள். இதெல்லாம் அவள் எதிர்பார்த்தபடியே இருந்தது. ஆகவே, கூடிய சீக்கிரம் புலிகேசிச் சக்கரவர்த்தி தன்னைப் பார்க்க அங்கு வருவாரென்றும் சிவகாமி தீர்மானித்தாள். அப்படி அவர் வரும் போது என்ன பேச வேண்டும், எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி ஓயாமல் சிந்தித்த வண்ணமிருந்தாள்.

சக்கரவர்த்தியின் விஷயத்தில் சிவகாமியின் மனோபாவம் இரண்டு விதமாயிருந்தது. ஒரு சமயம், அவருடைய சைனியம் செய்த கொடுஞ் செயல்களை எண்ணி எண்ணி அவளுடைய உள்ளம் கொதித்தது. மற்றொரு சமயம், அப்பேர்ப்பட்ட கொடுங்கோல் மன்னன் மீது அபலையாகிய தனக்கு ஏற்பட்டிருந்த சக்தியை நினைத்து அவள் உள்ளம் பெருமிதம் அடைந்தது.

இராவணன் கவர்ந்து சென்று அசோக வனத்தில் சிறைவைத்த சீதாதேவியின் நினைவு சிவகாமிக்கு அடிக்கடி வந்தது. சீதையின் நிலைமைதான் தன்னுடைய நிலைமையும். இராமபிரான் இராவணனை வென்று சீதையைச் சிறை மீட்டுக் கொண்டு போனது போல் மாமல்லர் ஒருநாள் வந்து இந்தப் பாதகப் புலிகேசியை வென்று தன்னைச் சிறை மீட்டுக் கொண்டு போகப் போகிறார்!

இவ்விதம் நம்பிய சிவகாமி, சீதைக்கும் தனக்கும் இருந்த வித்தியாசத்தைப் பற்றியும், எண்ணமிட்டாள். சீதாதேவியை இராவணன் அவளுடைய அழகுக்காக ஆசைப்பட்டு அபகரித்துக் கொண்டு வந்தான். அவளைக் கலியாணம் செய்து கொள்ள விரும்பினான். ஆனால், புலிகேசியோ தன்னிடமிருந்த நாட்டியக் கலையின் மேல் மோகங்கொண்டு தன்னைச் சிறைப்பிடித்து வந்திருக்கிறான். (புலிகேசியே மாறுவேடம் பூண்ட புத்த பிக்ஷு என்னும் நம்பிக்கை சிவகாமியின் உள்ளத்தில் வேரூன்றியிருந்தபடியால் இவ்விதம் எண்ணினாள்.) ஆகையால், இராவணன் மீது சீதைக்கு இல்லாத செல்வாக்கு, தனக்கு வாதாபிச் சக்கரவர்த்தியின் மீது இருக்கிறது. தன் கலையின் சக்தி கொண்டு அவரைத் தன் இஷ்டப்படியெல்லாம் ஆட்டி வைக்கலாம். ஆ! அந்தப் பொல்லாத புத்த பிக்ஷுவைத் தான் இலேசில் விடப் போவதில்லை. வரட்டும் இங்கே! எப்படியும் என்னிடம் வந்துதானே ஆக வேண்டும்?

சிவகாமி வாதாபி வந்து சேர்ந்த எட்டாம் நாள் அவளுடைய மனோரதம் ஈடேறியது. சக்கரவர்த்தி அவளைப் பார்ப்பதற்காக அந்த அரண்மனைக்கு வந்தார். வாசற்புறமிருந்த தாதி ஓடி வந்து, ''சக்கரவர்த்தி வருகிறார்!'' என்று தெரிவித்ததும், சிவகாமி மிக்க பரபரப்புக் கொண்டு

அமரர் **கல்கி**

வாதாபிச் சக்கரவர்த்தியை வரவேற்கவும், அவர்மீது தன் கூரிய கண்ணம்புகளையும், சொல்லம்புகளையும் செலுத்தவும் ஆயத்த மானாள்.

ஆனால், சக்கரவர்த்தி அரண்மனைக் குள்ளே வந்து நின்று அவளை மேலும் கீழும் ஏறிட்டுப் பார்த்து விட்டு, அவள் கனவிலே கேட்டது போன்ற ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்ததும், சிவகாமி எண்ணி யிருந்த எண்ணமெல்லாம் எங்கேயோ போய் விட்டன. இன்னதென்று சொல்ல முடியாத ஒரு பீதி அவளுடைய இருதயத்தில் புகுந்து தேகமெல்லாம் வியா பித்துத் தேகத்தின் எலும்புகளுக் குள்ளே பிரவேசித்து ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது. வாயைத் திறந்து பேச முடியாத படி நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது.

''சிற்பி மகளே! நாட்டிய கலா ராணியே! மகேந்திர பல்லவனின் கலைப் பொக்கிஷமே! சௌக்கியமா? வாதாபி வாசம் உனக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று புலிகேசி கேட்ட போது, சிவகாமி யின் உடம்பு படபடத்து நடுங்கிற்று.

தன்னுடைய நாட்டியத் தோற்றங் களிலே வெகு சாதாரணமான தோற்றத் தைக் கண்டு அப்படியே பரவசப்பட்டு நின்ற புத்த பிக்ஷுவா இவர்? தன்னிடம் அணுகும்போதே பயபக்தியுடன் அணுகி உணர்ச்சி மிகுதியினால் தன்னுடன் பேச முடியாமல் தத்தளித்து நின்ற நாகநந்தி இவர்தானா? பொன்முகலி நதிக்கரையில் தொண்டை நாட்டுப் பெண்களை விடு தலை செய்ய வேண்டுமென்று தான் வரங் கேட்டுப் பெற்ற போது, அவர் இவ்வித மில்லையே? வாதாபி நகருக்கு வந்து விட்டதனாலேயே இவரிடம் இந்த வித்தி யாசம் ஏற்பட்டிருக்கிறதா?

இவ்விதம் சிவகாமியின் உள்ளக் கடல் கொந்தளித்துக் குழம்ப, புலிகேசியின் கேள்விகளுக்கு மறுமொழி ஒன்றும் சொல்ல முடியாமல் நின்றாள். அதைப் பார்த்த புலிகேசி, ''பெண்ணே! ஏன் மௌனம் சாதிக்கிறாய்? 'கலை உணர்ச்சி யில்லாத வாதாபிப் புலிகேசியுடன் நமக்கு என்ன பேச்சு' என்ற எண்ணமா? அப்படி நான் அடியோடு கலை உணர்ச்சி இல்லா தவனல்ல. அவ்விதமிருந்தால் சிறைப் பிடித்துக் கொண்டு வந்த உன்னை இந்த அரண்மனையில் வைத்திருப் பேனா? பல்லவ நாட்டின் இணையற்ற நடன கலாராணிக்குத் தகுந்த அலங்கார மாளிகையல்லவா இது? இங்கு உனக்கு எல்லாம் சௌகரியமாயிருக்கிறதா? பணிப் பெண்கள் திருப்தியாகப் பணிவிடை செய் கிறார்களா? ஏதாவது குறை இருந்தால் சொல்!'' என்றார்.

புலிகேசியின் பேச்சு எவ்வளவோ அருவருப்பாயிருந்த போதிலும் இனிப் பேசாமல் இருக்கக் கூடாது என்று சிவகாமி கருதி, மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு,



''பிரபு! இங்கு எல்லாம் சௌகரியமாயிருக்கிறது. ஒரு குறையும் இல்லை, மிக்க வந்தனம்!'' என்றாள்.

''ஆஹா! வாய்திறந்து பேசுகிறாயா? நல்லவேளை! நீ மௌனமாய் நின்றதைப் பார்த்து விட்டு, நீ உயிருள்ள பெண்தானா அல்லது உன் தந்தை அமைத்த கற்சிலைகளில் ஒன்றைத்தான் சிறைப் பிடித்துக்



கொண்டு வந்து விட்டோமா என்று சந்தேகித்தேன். நீ இந்த மட்டும் பேசியது மிக்க சந்தோஷம். நீ வாயினால் சொன்னபடி உண்மையாகவே எனக்கு வந்தனம் செலுத்த விரும்பினால் அதற்கு ஒரு சந்தர்ப்பம் இருக்கிறது...'' என்ற புலிகேசி மேலும் கூறத் தயங்கி நின்றார்.

அவர் என்ன சொல்லப் போகிறாரோ என்ற பீதியுடன் சிவகாமி மௌனமாயிருந்தாள்.

''பெண்ணே! அந்த மூடன் மகேந்திர பல்லவன் என்னைக் கலை உணர்ச்சி அற்றவன் என்று சொன்னான். அதை நீயும் நம்பினாய். நரிக்கும் புலிக்கும் எவ்வளவு வித்தியாசமோ, குட்டைக்கும் சமுத்திரத்துக்கும் எவ்வளவு வித்தியாசமோ, உள்ளங்கை அகலமுள்ள தொண்டை மண்டலத்துக்கும் விஸ்தாரமாகப் பரந்த சளுக்க சாம்ராஜ்யத்துக்கும் எவ்வளவு வித்தியாசமோ, அவ்வளவு வித்தியாசம் மகேந்திர பல்லவனுடைய கலை உணர்ச்சிக்கும் என்னுடைய கலை உணர்ச்சிக்கும் உண்டு. கூடிய சீக்கிரத்தில் இதை நீயே தெரிந்து கொள்வாய். கலா ராணியே! கேள்! தொலை தூரத்திலுள்ள பாரசீக நாட்டுச் சக்கரவர்த்தியிடமிருந்து என்னுடைய சபைக்குத் தூதர்கள் வந்திருக்கிறார்கள். என்னுடைய நட்பைக் கோரிப் பாரசீகச் சக்கரவர்த்தி காணிக்கைகளும் சன்மானங்களும் அனுப்பியிருக்கிறார். பாரசீகத் தூதர்களைப் பகிரங்கமாக வரவேற்பதற்கும் அவர்கள் கொண்டுவந்த காணிக்கைகளை ஏற்பதற்கும் நாளைய தினம் மகுடாபிஷேக மண்டபத்தில் மகாசபை கூடுகிறது. அந்த மகாசபையில் வந்து நீ நடனம் செய்ய வேண்டும்.''

இத்தனை நேரம் பயமும் பலவகைக் குழப்பங்களும் குடிகொண்டிருந்த சிவகாமியின் உள்ளம் நடனம் என்ற வார்த்தையைக் கேட்டதும் அசாதாரண தைரியத்தை அடைந்தது. கொஞ்சமும் தயங்காமலும் பயப்படாமலும் தலைநிமிர்ந்து புலிகேசியை நோக்கி அழுத்தந் திருத்தமான குரலில், ''முடியாது'' என்றாள்.

புலிகேசியின் கண்கள் ஒருகணம் ஜ்வாலாக்கினியைக் கக்கின. தன்னை மீறிக் கொண்டு வந்த கோபத்தைப் புலிகேசி பல்லைக் கடித்துச் சமாளித்துக் கொண்டதாகத் தோன்றியது.

''பெண்ணே! ஏன் இவ்வளவு கண்டிப்பாக 'முடியாது' என்று சொல்லுகிறாய்? மூன்று நாள் உனக்கு அவகாசம் கொடுக்கிறேன்; யோசித்துச் சொல்!'' என்றார்

புலிகேசி.

''யோசிப்பதற்கு அவசியமேயில்லை, பிரபு! என்னைத் தங்களுடைய சபையில் ஆடச் சொல்லி, மகேந்திர பல்லவரைத் தாங்கள் ஜயித்து வந்தது பற்றி உலகத்துக்கெல்லாம் பறையறையப் போகிறீர்கள். 'பல்லவ நாட்டிலிருந்து கொண்டு வந்த அடிமை இவள்!' என்று சுட்டிக் காட்டப் போகிறீர்கள். ஆ! தங்கள் நோக்கம் தெரிந்தது. தாங்கள் என்னைச் சிறைப் பிடிக்கலாம். என்னுடைய தேகத்தை அடிமை கொள்ளலாம். என் ஆத்மாவையும் கட்டுப்படுத்தலாம். ஆனால், என்னிடமுள்ள கலையைத் தங்களால் அடிமைப்படுத்த முடியாது. அதிகாரத்துக்கு அடங்கி, ஆக்ஞைக்குப் பயந்து நான் நடனம் ஆட மாட்டேன்! ஒருநாளும் ஆட மாட்டேன்'' என்றாள்.

ஆத்திரம் பொங்கிய குரலில் சிவகாமி மேற்கூறிய மொழிகளைக் கூறி வந்த போது புலிகேசியின் கண்கள் செந்தணல் நிறம் பெற்று அனல் உமிழ்ந்தன. சிவகாமி பேசி முடித்ததும் புலிகேசி பழையபடி ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்தார்.

''பெண்ணே! பொறு! இவ்வளவு பதற்றம் உனக்கு எங்கிருந்து வந்தது? அப்படியொன்றும் உன் தேகத்தையோ, உன் கலையையோ அடிமைப்படுத்த எனக்கு உத்தேசமில்லை. உனக்கு இஷ்டமில்லாவிட்டால் நீ நடனம் ஆட வேண்டாம். இந்த அரண்மனைக்குள்ளே உன்னைச் சிறைப்படுத்தி வைத்திருப்பதாகவும் எண்ண வேண்டாம். உனக்கு இஷ்டமான போது நீ இந்த மாளிகையை விட்டு வெளியே போகலாம். வாதாபி நகரைச் சுற்றிப் பார்த்து விட்டு வரலாம். உங்கள் காஞ்சியைப் போல் எங்கள் வாதாபி அவ்வளவு அழகாயில்லாவிட்டாலும், ஏதோ பார்க்கத் தகுந்த காட்சிகள் இங்கேயும் இருக்கின்றன. இந்த அரண்மனை வாசலில் காவல் காப்பவர்கள் உன்னைச் சிறை வைப்பதற்காக இங்கு இருக்கவில்லை. உனக்கு ஏவல் புரிவதற்காக இருக்கிறார்கள். நீ எப்போது சொல்கிறாயோ அப்போது அவர்கள் உனக்குப் பல்லக்குத் தருவித்துக் கொடுப்பார்கள். மறுபடியும் என்னைப் பார்ப்பதற்கு நீ விரும்பினாலும் அவர்களிடமே சொல்லி அனுப்பலாம். சிற்பி மகளே! நீ என் அதிகாரத்துக்குப் பயந்து நடனமாட வேண்டாம். உன் இஷ்டம் போல் சுயேச்சையாகவும் சுகமாகவும் இருக்கலாம்!''

இவ்விதம் சொல்லி விட்டுப் புலிகேசிச் சக்கரவர்த்தி சிவகாமியைக் கூர்ந்து பார்த்தார். அந்தப் பார்வையில் எல்லையில்லாத துவேஷமும், பழிவாங்கும் உறுதியும் குடிகொண்டிருந்ததைச் சிவகாமி கவனிக்கவில்லை. அந்த ஏழைப் பெண் அப்போது தரையை நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்தாள். கொடுமைக்கும் கொடூரத்துக்கும் பெயர் போன வாதாபிப் புலிகேசியைத் தான் வென்று விட்டதாக அவளுடைய உள்ளம் இறுமாப்புடன் எண்ணமிட்டுக் கொண்டிருந்தது.

அன்று மாலை சிவகாமி வாசற் காவலரிடம் தான் வாதாபி நகரைச் சுற்றிப் பார்க்க விரும்புவதாகக் கூறிப் பல்லக்குக் கொண்டு வரச் சொன்னாள்.

''உன்னை இங்கே சிறை வைத்திருக்கவில்லை. உன் இஷ்டப்படி வெளியே சென்று வரலாம்'' என்று புலிகேசி கூறியது அவள் மனத்தை விட்டு அகலாதிருந்தது.

தன்னுடைய சுதந்திரத்தை அன்றே பரிசோதித்து விட எண்ணிப் பல்லக்கில் ஏறிக் கொண்டு புறப்பட்டாள்.

(தொடரும்)

## குழந்தைகளுக்கும் கொலஸ்ட்ரால்!

❑ கலிபோர்னியா பல்கலைக் கழகம் 1,000 குழந்தைகளை - இரண்டு வயது முதல் இருபது வயதுவரை - ஆராய்ந்ததில் கிடைத்த தகவல் இது :

தினசரி டி.வி.யின் முன் 2 முதல் 4 மணிநேரம் வரை செலவிடும் சிறுவர்க்கு கொலஸ்ட்ரால் இரண்டு மடங்காக அதிகரிக்க வாய்ப்புள்ளது. நான்கு மணி நேரத்திற்கும் அதிகமாக டி.வி. பார்க்கும் வாண்டுகளுக்கு இது நான்கு மடங்காக இருக்குமாம்! இச்சிறுவயதிலேயே அதிகரிக்கும் கொலஸ்ட்ராலினால் வருங்காலத்தில் இவர்களுக்கு இருதய நோய்கள் வர வாய்ப்புண்டு. டி.வி. பார்க்கும் நேரத்தில் வகை தொகையில்லாமல் நொறுக்குத் தீனியை வெட்டுவதும், உடற் பயிற்சியின்றி ஒரே இடத்தில் அமர்ந்திருப்பதும் நோய்க்கு வழிவகுக்கின்றன.

நன்றி : ஹெல்த்

தகவல் : குடியாத்தம் ஹரிகோபி

# அப்பு கட்சி Vs அலமு கட்சி

**வை**ஷாலி வருவதை முதலில் பார்த்தவன் அப்புதான். ''சிச்சி!'' என்று கத்தியபடி அருகில் ஓடினான். சித்திக்கு அவன் வைத்திருக்கும் பெயர் சிச்சி.

''அட என் அப்புக் குட்டித் தங்கம்!'' என்று குனிந்து அவனை முத்தமிட்டாள் வைஷாலி. அவனின் மூக்குச் சளி முழுவதும் அவளின் கன்னத்தில்.

சிச்சியின் கைப் பையைப் பிடுங்கிக் கொண்டு ஹவுசிங் போர்டு குடியிருப்பு மாடிப்படி ஏறினான். ''சிச்சி வந்தாச்சு, அம்மா, சிச்சி....'' என்ற கும்மாளம் வேறு.

''என்னடா அதிசயம்? தினமும்தான் உன் சிச்சி வர்றா'' என்றாள் எதிர்ப் பகுதி பிரேமா.

''அய்! சிச்சி ஜெம்ஸ் வாங்கி வந்திருக்கா!''

''டே, அவ கைப் பையைத் திறக்கக் கூடாது. அவ பழைய சிச்சி இல்ல. அவளைச் சித்தப்பாக் கைல பிடிச்சுக் குடுத்தாச்சு....'' என்றாள் பர்வதம்.

''சீ, ஏங்கா அப்படிப் பிரிச்சுப் பேசற? அவன் சமத்து. என் செல்ல வளர்ப்பு. நீ என் பையைத் திறக்கலாம்டா....'' என்றாள் வைஷாலி.

''தோசை எடுத்துக்கோயேண்டி சூடா? சட்னியும் இருக்கு....''

''சுடு அக்கா, கேள்வி என்ன? உன் கை மணமே தனி.''

''சிச்சி, நான் உன் வீட்டுக்கு வரவா? பூதம் பாட்டி திட்டாமப் பாத்துக்கிறியா?''

''தாராளமா வா. உன் சிச்சி வீட்டுக்கு நீ வரத் தடை ஏது?''

''பூதம் பாட்டி எப்பப் பார் திட்டும். டே, டீ.வில என்ன விஷமம்? லைட் சுவிச்சை ஏண்டா போட்டுப் போட்டு அணைக்கற? ஹேர் ஆயில் பாட்டிலை எடுத்து என்ன பார்வை? அய்யோ, பிள்ளை வளர்த்திருக்கா பாரு!...'' - பூதம் பாட்டியின் குரலை அப்பு 'மிமிக்ரி' செய்ய அக்காவும், தங்கையும் சிரித்தனர்.

பூதம் பாட்டி, வைஷாலியின் மாமியார். நரைத் தலை. முன் கீழ் வரிசைப் பற்கள் இரண்டு விழுந்து, பெரும் இடைவெளி இருக்கும்.



கண்ணன் மகேஷ்

''ஷ்! மாப்பிள்ளை வர்றார்....'' என்றாள் பார்வதம்.

வைஷாலியின் கணவன் சாம்பு, ஸ்கூட்டரைத் தெருவில் நிறுத்தி, படி ஏறி வந்தான்.

கதவுக்குப் பின்னால் இருந்து ''பே!'' என்று கத்தி, அப்பு, ''சித்தப்பா!'' என்று முழங்காலைக் கட்டினான்.

போக்க வெள்ளை பேண்ட்!

''டே, டேய்!'' என்று விலக்கி விட்டான் சாம்பு. ''போகலாமாடீ இவளே?...''

''தோசை சாப்பிடுங்க மாப்பிளே!'' - பார்வதம், கை ஒடிந்த நாற்காலி மீது கிடந்த துணிகளை அகற்றினாள்.

''வேண்டாம்...'' என்று அமர்ந்தான் சாம்பு, அழுக்காகி விட்ட வெள்ளை பேன்டைக் கைக்குட்டையால் துடைத்தபடி.

''ஏங்க, அப்பு எவ்வளவு புத்திசாலி தெரியுமா? அந்த வயசுல இப்படி ஒரு மூளை! ஆகாய விமானம் மேல மேல போய் மேகத்துக்குள்ள போயிட்டுதாம்!'' என்றாள் வைஷாலி.

''அவன் மானத்துல கையைக் காமிச்சான். அப்படிச் சொன்னான்னு நீ சொல்ல ஆரம்பிச்சுட்ட!'' என்று காப்பி ஆற்றினான் சாம்பு.

''அப்புவை நம்ம கூடக் கூட்டிப் போவமா? முன்னால நிறுத்தி வெச்சுப் பீங்களாம்....''

''ஸ்கூட்டர்ல த்ரிபிள்ஸ் போகக் கூடாது. கிளம்பு....'' என்று படி இறங்கினான் சாம்பு.

வீட்டு வாசலில் 'கிரிக், கிரிக்' என்று ஹாரன் அடித்தான் சாம்பு. ''அய்! மாமா வந்தாச்சு!'' என்று ஓடி வந்தாள் சிறுமி அலமு.

''க்ரீம் பிஸ்கட்தான் வேணும்னு அடம் பிடிக்கற. சொன்னா கேட்டாத்தானே? பல் எல்லாம் சொத்தை ஆகட்டும், தின்னு வை!'' என்று பிஸ்கட் பாக்கெட்டை நீட்டினான் சாம்பு.



## நேரம் ஒதுக்குங்கள்!

சிரிப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள்,
அஃது இதயத்துக்கு அழகு.
சிந்திப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள்,
அஃது அறிவுக்கு அழகு.
விளையாட நேரம் ஒதுக்குங்கள்,
அஃது இளமைக்கு அழகு.
நட்புக்கு நேரம் ஒதுக்குங்கள்,
அஃது உறவுக்கு அழகு.
உழைப்புக்கு நேரம் ஒதுக்குங்கள்,
அஃது உயர்வுக்கு வழி!

(கல்லூரி சஞ்சிகை ஒன்றிலிருந்து)
- நல்லாலம் க. இராமசெயம்

''போ மாமா, எனக்கு பிஸ்கட் வேணாம்...'' - அலமு பிஸ்கட் பாக்கெட்டை ஸ்கூட்டர் சீட் மீது வைத்துவிட்டு வீட்டினுள் ஓடினாள்.

''அடடா, விளையாட்டுக்குச் சொன்னேன்டி கண்ணு. கோபமா? ப்ளீஸ், இதை வாங்கிக்கோடி...'' வீட்டினுள் வந்து அலமுவின் கன்னத்தை நிமிண்டினான் சாம்பு.

''என்ன, வந்ததும் வராததுமா மாமனும், மருமாளும் கொஞ்சல்?'' என்றாள் சாம்புவின் அம்மா.

'ஆமாம். அஞ்சாம் கிளாஸ் படிக்கிற பாப்பான்னு நினைப்பு. கழுதைக்கு தினம் தினம் இங்கே என்ன வேலை? அடுத்த தெருவில் தானே இவளின் அப்பாவும், அம்மாவும் இருக்கிறார்கள்? அங்கேயே கிடக்க வேண்டியது தானே?' என்று எரிச்சலுற்றாள் வைஷாலி.

''அட, இன்னிக்கு பிப்ரவரி இருபத்தி ஆறு! நம் அலமுவுக்குப் பன்னிரண்டு முடிந்து பதிமூன்று துவங்குகிறது. எங்க கண் எதிர அன்றொரு நாள் கையையும், காலையும் உதைத்து இத்தனூண்டா கிடந்த குட்டி இன்னிக்கு என்னை மடக்கு மடக்குன்னு மடக்குது! காலம் ஜெட் வேகத்துல பறக்குது!...''

''மாமி உன்னைக் கல்யாணம் பண்ணிண்டும் ரெண்டு வருஷம் ஓடிப் போச்சு மாமா....''

''அ? ரெண்டு வருஷப் பழகுற? எனக்கு என்னவோ கல்யாணநாள் கிறு கிறுப்பு இன்னும் அப்படியே இருக்கு.....'' என்று அடுத்த அறைக்குச் சென்றான் சாம்பு உடை மாற்ற.

சாம்பு பிஸ்கட்டும், டீயுமாக நாற்காலியில் அமர, பின்னால் வந்து அவன் கழுத்தைக் கட்டினாள் அலமு. ''ஒரு உதவி மாமா. கம்ப்யூட்டர் பிராப்ளம்ஸ் நடத்தின அன்னிக்கு நான் ஸ்கூல் போகலை. இந்த சம்ஸ் என்னைக் குழப்புது. சொல்லிக் குடு மாமா.''

''மாமிதான் ஸ்கூல்ல கம்ப்யூட்டர் மிஸ். பிரமாதமாச் சொல்லித் தர்றான்னு சகமிஸ்கள் புகழறா. நீ மாமியைப் பிடி....''

''நீங்க வேற, சும்மா இருங்க. நான் சயன்ஸ் மிஸ்தான்.....''

''சரி கொண்டா என்ன பொல்லாத கணக்கு? நாமே நொறுக்கித் தள்ளிடுவோம்....'' என்று கணக்குப் போட அமர்ந்தான் சாம்பு.

ஒரு மணி நேரம் வீண்.

''புரியலியே! பைநரி சிஸ்டத்துல கூட்டலும், கழித்தலும் ஏதோ மாய வித்தையா இருக்கே! சரி, நீ புறப்படு. பிறகு நான் மாமி கிட்ட கேட்டு வெக்கறேன். ஸ்கூட்டர்ல உன்னை வீட்ல கொண்டு விடறேன்...'' என்று புறப்பட்டான் சாம்பு.

**வீ**ட்டு வாசலில் கிரிக், கிரிக்! சாம்பு தான் அலமுவைக் கொண்டு விட்டுத் திரும்பி இருந்தான். வாசல் கதவை எவரும் வந்து திறக்கவில்லை. சாம்புவே திறந்து உள்ளே வந்தான்.

டீ.வியில் ஒரு பெண்மணி ஸ்வெட்டர் பின்னுவது பற்றி விளக்கினாள். வைஷாலி தரையில் அமர்ந்து மாணவ நோட்டுகள் திருத்தினாள். அம்மா சமையலறையில் சப்பாத்தித் தயாரிப்பில்.

''இப்ப திருத்தறியே, சயன்ஸ் நோட்டுகளா?''

''இல்ல. கம்ப்யூட்டர்.''

''அப்ப ஏன் அலமு கேட்டதுக்கு?....''

''அதுக்கு என்ன இப்ப?....''

''ஏய், என்ன பேசற நீ? எதுக்கு அந்தக் குழந்தை மேல வெறுப்பைக் காட்ற? இந்த வீட்ல வளர்ந்த குழந்தை அது. நாங்க அது மேல உசிரையே வைச்சிருக்கோம்....''

வைஷாலி அமைதியாக நோட்டுத் திருத்தினாள்.

''அலமு உங்கிட்டயும் பிரியமாத் தானே இருக்கா? அவளை நீ வெறுக்கக் காரணம் என்ன?...''

''நீங்க ஏன் எங்க அப்புவை உதாசினம் பண்றீங்க? அவன் என் செல்லம்....''

''அந்த மூக்கு ஒழுகிப் பையன்? அய்ய, நினைச்சாலே குமட்டுது!''

''இவ மட்டும் என்ன? தலை முழுக்க ஈரும் பேனும். பார்க்கவே பிடிக்கல.''

''இன்னொரு தடவை நீ அலமுவை அலட்சியம் பண்ணினா, நடக்கிறதே வேற.''

''அவளை எனக்குப் பிடிக்கல. அவ இனி இங்கே வரவேண்டியது இல்ல.''

''உன் முகத்தைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கல. எங்கிட்ட நீ பேசவே வேண்டாம்.''

''ரொம்ப நல்லது!''

மூன்று நாட்கள் ஆயின வைஷாலியும், சாம்புவும் நேருக்கு நேர் பேசி. தனிச் சாப்பாடு, படுக்கை. அவன் ஆபீசுக்கு ஸ்கூட்டரில் போய் வர, அவள் பஸ்ஸில். அம்மா இவர்களுக்கு மௌன சாட்சி. மேலும் இரு நாட்களுக்குப் பிறகு.... வைஷாலியின் அக்கா பர்வதம் வந்தாள். கூடவே வால்போல் ஒட்டிக் கொண்டு அப்பு.

''ஹை! அப்புக்குட்டி என்று வைஷாலி குதூகலத்துடன் வாசலுக்கு ஓடியதைப் பார்த்துச் சாம்புவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

''குடுடா'' என்று பர்வதம் அப்புவின் கையில் ஒரு பொட்டலத்தைத் திணிக்க,

''சித்தப்பா, உங்களுக்காகத்தான் வாங்கினோம்'' என்று அதை நீட்டினான் அப்பு.

வெல்லம் கசிந்த கடலை உருண்டை பொட்டலத்தை வேண்டா வெறுப்பாக வாங்கிக் கொண்டான் சாம்பு.

சற்று நேரம் அசௌகரியமான மௌனம்.

வைஷாலி காப்பி கலக்க உள்ளே போக, பர்வதம் பின்தொடர்ந்தாள்.

''சித்தப்பா! கட்டல உண்ட பிடிக்காதா....? தின்னு....'' அப்பு சாம்புவிடம் நெருங்கி ஒட்டினான்.

வைஷாலியின் மேலிருந்த கோபத்தையும் சேர்த்துக் குவித்துக் கொண்டு அப்புவின் கையை இரும்புப் பிடியாகப் பிடித்தான் சாம்பு.

''ஆ! வலிக்குது சித்தப்பா....'' என்று அப்பு இனம்புரியாத பயத்துடன் அலற குட்டிப் புயல் போல் கூடத்துக்குள் நுழைந்தாள் வைஷாலி.

புயல் சீறுவதற்குள்.....

''மாமா! அட! இது யாரு அப்புக்குட்டியா....? எப்போ வந்தே....?'' என்றபடி சாம்புவின் பிடியிலிருந்து அவனுக்கு விடுதலை பெற்றுத்தந்தாள் உள்ளே வந்த அலமு.

''மாமா உன் கைல என்ன? கட்ல உண்டையா? கொண்டா அப்புக்குட்டிக்குக் குடுக்கலாம்...'' என்று அவன் கைப் பொட்டலத்திலிருந்து ஒரு உருண்டையை எடுத்து அப்புவின் வாயில் போட்டாள்.

''எங்கே, அக்காவுக்கு ஒரு கிஸ் குடு பார்க்கலாம்'' என்று அவள் குனிந்து மொழு மொழு கன்னத்தை நீட்ட.....

அப்பு அவசர அவசரமாகக் கடலையுருண்டையை வாய் ஓரத்தில் ஒதுக்கிக் கொண்டு ஈர உதடுகளால் அழுத்தி முத்தமிட்டான்.

மூக்குச் சளி ஒழுக, கடலையுருண்டையால் உப்பிய கன்னத்துடன் அப்பு அலமுவுக்கு முத்தம் தருவதைப் பார்த்தாள் வைஷாலி.

சட்டென்று குற்ற உணர்வு ஆட்கொள்ள, சாம்புவை ஏறிட்டாள். அவன் பார்வையைச் சந்தித்த கணத்தில் அவளுள்ளும் ஒரு பிடிவாதம் உடைந்து நொறுங்கியது.

''நீங்க சொன்னதைக் கேட்டு ரேஷன் கடையில் எல்லாரும் சிரிச்சாங்களாமே...! அப்படி என்ன சொன்னீங்க?''

''கொஞ்சம் எடையைச் சரியாப் போட்டுக் கொடுங்கன்னு கேட்டேன்...!''

- சீர்காழி வி. ரேவதி



''நீங்க எழுதிப் பிரசுரமான கதைக்கு அன்பளிப்பாக ஆசிரியர் 25 கிராம் காப்பிப் பொடியா அனுப்பிச்சார்?''

''அது காப்பியடிச்ச கதைங்கிற சங்கதி தெரிஞ்சு போச்சு போலிருக்கு.''



# பிஞ்சுக் குழந்தைகளை வதைக்கும் பள்ளிகள்!

**வ**ருணின் வயது : மூன்றரை. அவனுக்கு அடிக்கடி கடுமையான வயிற்று வலி வருகிறது. இரவில் துர்ச்சொப்பனம் கண்டு அலறுகிறான். அவன் கண்கள் உணர்ச்சியின்றி நிலைகுத்தி நிற்கின்றன....

''இந்தக் குழந்தைக்கு என்ன கோளாறு என்றே முதலில் எங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை....'' என்கிறார் குழந்தை மருத்துவர் டாக்டர் குலாடி. ''பெற்றோரிடம் தூண்டித் துருவிப் பேசியதில் அவனைப் 'பெரிய பள்ளியில்' சேர்க்க முன் முயற்சிகள் எடுத்து வருகிறார்கள் என்று தெரிந்தது.''

வருணின் தினப்படி வாழ்க்கைமுறை என்ன தெரியுமா....?

காலை ஐந்து மணிக்குப் படுக்கையிலிருந்து எழுப்பப்படுகிறான். பால் புட்டியை வாயில் திணித்து, அவன் அதைக் குடித்து முடிப்பதற்குள் அவசர அவசரமாக உடை மாற்றி, ஐந்தே முக்கால் மணிக்கு அவனை ஸ்கூல் பஸ்ஸில் ஏற்றிவிடுகிறார்கள் பெற்றோர்.

பன்னிரண்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பள்ளியிலிருந்து மதியம் பன்னிரண்டரை மணிக்குத் திரும்புகிறான் வருண்.. மாலை நான்கு முதல் ஆறு மணி வரை டியூஷன். அதன் பின்னர் ஒரு மணி நேரத்துக்கு அவன் அம்மாவுடன் பாடங்கள் படிக்க வேண்டும். பிறகு டீ.வி. சீரியல் பார்த்துவிட்டுத் தூங்கலாம். மீண்டும் மறு நாள் காலை ஐந்து மணிக்கு எழுந்து கொள்ள வேண்டும். அட்டவணைத் திட்டப்படி வாழ்க்கை... இப்பொழுது முதலே இப்படிப் படித்தால்தானே 'பெரிய ஸ்கூலில்' அட்மிஷன் கிடைக்கும்!

''வருணைக் கடைசியில் மன நல நிபுணரிடம் அனுப்பி வைக்க வேண்டியதாயிற்று...'' என்று வருத்தத்துடன் கூறுகிறார் டாக்டர் குலாடி. ''அவன் வயிற்று வலிக்கும் சோகத்துக்கும் துர்ச்சொப்பனங்களுக்கும் காரணம் அவன் மனத்தில் நிலவிய பய உணர்ச்சியே! இப்படித்தான் பல பெற்றோர்கள் குழந்தைகளின் பால்யத்தைத் திருடிக் கொள்கிறார்கள்'' என்று குற்றம் சாட்டுகிறார்.

இ ந் தி ய ா வை வ ப் பொறுத்தவரை பிறப்பு, திருமணம், இறப்பு என்ற வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகள் வரிசையில் நான்காவதாக இடம் பெறுகிறது பள்ளி அட்மிஷன்.

கடந்த சில வருடங்களாக இரண்டு, மூன்று வயதுக் குழந்தைகளிடையே அபூர்வமான தொற்று நோய்கள் காணப்பட்டு வருகின்றன என்கிறார்கள் குழந்தை மருத்துவர்கள். அவர்கள் பிஞ்சுப் பருவத்திலேயே பள்ளிக்கு அனுப்பப்படுவதால் வரும் கொடுமை இது என்கிறார்கள்.

Indian Academy of Paediatricians என்ற குழந்தை மருத்துவர்கள் அமைப்பு இந்தக் கொடுமையை எதிர்த்துக் குரல் கொடுத்திருக்கிறது. 'உங்கள் குழந்தைகளைச் சுதந்திரமாக விடுங்கள்; இல்லாவிட்டால் அவர்கள் அழிவுக்கு நீங்களே காரணம் ஆவீர்கள்' என்று பெற்றோரை எச்சரித்திருக்கிறது.

**புது டெல்லி பள்ளிக்கூடங்களைப் பற்றிய இக்கட்டுரை, தமிழ்நாட்டின் அனேகம் பள்ளிகளுக்கும் பொருந்துவதே.....**

**பெ**ரிய பிரபலமான பள்ளிகளில் சேருவதற்கான அட்மிஷன் டெஸ்டுகளுக்குக் குழந்தைகளைத் தயார் செய்வதாகக் கூறும் பள்ளிகள் வேறு! புற்றீசல் போல் கிளம்பும் இவை எத்தகையன.....? அவற்றைக் கட்டுப்படுத்தும் சட்டங்கள் எதுவும் கிடையாது. யார் வேண்டுமானாலும் அப்பள்ளிகளை ஆரம்பிக்கலாம். ஒரு சில பால பள்ளிகள் விளையாட்டு, பொழுது போக்கு நிலையங்களாக உள்ளன. ஆனால் பெரும்பாலானவை, குழந்தைகளைச் சிறிய அறைகளில் அடைத்து வைத்து எண்ணையும் எழுத்தையும் சிறிய மூளைகளுக்குள் திணிக்கின்றன. மாதிரிப் பரீட்சைகள் வைத்து, குழந்தைகளைப் 'பெரிய பள்ளி'ப் பரீட்சைக்குத் தயார்ப் படுத்துகின்றன!

சுமார் இருநூற்றைம்பது ஜதை பெற்றோரைப் பேட்டி கண்டதில் அவர்களுள் 83



சதவிகிதத்தினர் தங்கள் குழந்தைகளை இத்தகைய Pre-School களுக்கு அனுப்பி வருகிறார்கள் என்பது வெளியாயிற்று.

இவர்களது குழந்தைகளுள் 82 சதவிகிதத்தினர் காலைக் கடன் கழிக்கக் கூட நேரமின்றிப் பள்ளிக்கு அவசரமாக அனுப்பப்பட்டனர். 22 சதவிகிதம் குழந்தைகள் காலை உணவுக்கு நேரமில்லாததால், தூங்கியபடியே புட்டிப்பால் அருந்தி விட்டுப் பள்ளிக்குத் தயாரானார்கள். கனமான புத்தக மூட்டைகளைத் தூக்கியதில் பல குழந்தைகளுக்குத் தோள், முதுகு, கால் வலி இருந்தது.

இ ன் னு ம் பல குழந்தைகளுக்குத் திரும்பத் திரும்ப A B C எழுதியதில் கை வலி இருந்தது. 'அம்மா ஏன் என்னைக் கைவிட்டு விட்டாள்' என்ற ஏக்கம் இருந்தது.

''இவ்வாறு குழந்தைகளைத் துன்புறுத்தும் பெற்றோர்களின் எதிர்பார்ப்பு, 'தன் தோட்டத்துச் செடிகள் வேகமாக வளர்ந்து கொண்டேயிருக்க வேண்டும்' எ ன் று விரும்பும் தோட்டக்காரனுடையதைப் போன்றது'' எனக் கூறுகிறார் லேடி இர்வின் கல்லூரி இயக்குனர் டாக்டர் அனந்தலக்ஷ்மி. ''இந்தப் பருவத்தில் குழந்தைகளுக்குத் தேவை ABC அல்ல TLC அதாவது Tender Loving Care.....'' என்கிறார்.

இத்தனை கஷ்டங்களுக்கிடையே பெரிய பரீட்சைக்குத் தயாராகும் குழந்தையைப் பெரிய பள்ளிகள் இன்னும் அதிகமாக வதைக்கின்றன.

பல பள்ளிகளில் நுழைவுத் தேர்வின் போது முழுக்க முழுக்க ஆங்கிலத்தில் உரையாட வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். நிறங்கள், வடிவங்கள் தெரிந்திருப்பதோடு குழந்தைக்கு மூன்றெழுத்துச் சொற்கள் இரு மொழிகளில் தெரிந்திருக்க வேண்டும்! 'இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களின் பெயர் என்ன?' 'நமது ஜனாதிபதி யார்?' 'உலக வரை படத்தில் இந்தியா எங்கே என்று சுட்டிக்காட்ட முடியுமா....?' போன்ற கேள்விகள் எல்.கே.ஜி. அட்மிஷன் சோதனையில் கேட்கப்பட்டுள்ளன.

''குழந்தைகள் வெவ்வேறு இயல்பு உடையவர்கள். இயற்கையிலேயே வெட்கமோ, பயமோ அதிகம் படைத்த குழந்தைகளை இப்படி பதினைந்து இருபது நிமிடங்கள் கேள்வி கேட்டு அவர்கள் திறமையை அளவிட்டுவிட நிச்சயமாக முடியாது'' என்கிறார் லேடி இர்வின் கல்லூரியின் 'Child Development' துறை விரிவுரையாளர் டாக்டர் நீரஜா ஷர்மா.

''மூன்று வயதுக் குழந்தையால் மூன்று நிமிடங்களுக்குத்தான் ஒரே விஷயத்தில் கவனம் செலுத்த முடியும். முன்பின் தெரியாதவர்கள் மிரட்டும் தொனியில் கேட்கும் கேள்விகளுக்கு எதற்காகப் பதில் சொல்ல வேண்டும் என்பதே குழந்தைகளுக்குப் புரியாது'' என்கிறார் டாக்டர் நீரஜா.

பெற்றோர்களைப் ப ரி சோ தி த் து, அவர்கள் 'பாஸ்' ஆன பிறகு குழந்தைகளைப் பரிசோதிக்கும் பள்ளிகளும்

உண்டு. கணவன் மனைவியிடம் ஒரே வினாத்தாள் அளிக்கப்பட்டு அவர்கள் அதைத் தனித்தனியே, குறிப்பிட்ட நேரத்துக்குள் பூர்த்தி செய்யும்படி பணிக்கப்படுகிறார்கள். இருவர் விடைகளும் ஒத்துப்போனால் அடுத்த கட்டமாகக் குழந்தைக்குப் பரீட்சை. இல்லாவிட்டால் குழந்தையின் அப்ளிகேஷன் நிராகரிக்கப்படுகிறது!

"பரீட்சை வைத்து, சிறந்த, புத்திசாலிக் (நாம் புத்திசாலி என்று நினைக்கும்) குழந்தைகளை மட்டும் தேர்வு செய்து சேர்த்துக் கொண்டு பள்ளி நடத்துவதில் பெருமை கிடையாது'' என்கிறார் ரஜனி குமார். இவர் டைரக்டராக உள்ள ஸ்பிரிங் டேல்ஸ் பள்ளியில் அட்மிஷன் தேர்வுகள் கிடையாது. எத்தகைய குழந்தையானாலும் அவனைப் பயிற்சி மூலம் சிறந்த மாணவனாக உருவாக்குவதில்தான் ஆசிரியரின் சாமர்த்தியம் இருக்கிறது....'' என்கிறார்.

ஆனால் பெரும்பாலான பள்ளிகளில் இந்த சித்தாந்தம் கிடையாது. மூன்று வயதிலேயே ஒரு பிஞ்சுக் குழந்தையைப் பரிசோதித்து, அவர்களது அளவு கடந்த எதிர்பார்ப்புகளை அவன் பூர்த்தி செய்யா விட்டால் 'ஃபெயில்' என்ற முத்திரை குத்தி நிராகரிப்பதே நடைமுறையாக உள்ளது.

இவ்வாறு நிராகரிக்கப்படும் குழந்தையின் மனநிலை அதீதமான பாதிப்புக்கு உள்ளாகும். மாறி மாறிப் பல தேர்வுகள் எழுதி, மீண்டும் மீண்டும் நிராகரிக்கப் படும் போது குழந்தைக்குக் கடுமையான மனச் சோர்வு உண்டாகும். மலர வேண்டிய மொட்டு கூம்பிப் போகும். குழந்தையின் இயல்பான கல்வியார்வமே மடிந்துவிடும். ஒன்பது அல்லது பத்து வயதுக்குள் எதிலுமே நாட்டமின்றிச் சோர்ந்து விடுவான்.

இப்பிரச்னைக்குத் தீர்வு என்ன? National Progressive Schools Conference என்ற கருத்தரங்கில் இதைப் பற்றி விவாதம் நடந்தது. பல்வேறு குடும்பப் பின்னணிகளிலிருந்தும் ஒரே வட்டாரத்திலிருந்தும், மாணவர்களுக்கு அட்மிஷன் தரலாம் எனவும், சீட்டுக் குலுக்கல் முறையில் அட்மிஷன் தரலாம் என்றும் மனஇயல் நிபுணர்கள் பரிந்துரைத்துள்ளார்கள். ஆனால் போதுமான பள்ளிகள் இல்லாததால் இப்பிரச்னையை எளிதில் தீர்க்க முடியவில்லை.

- டைம்ஸ் ஆஃப் இந்தியாவில் சிம்ரன் பார்கவா எழுதிய கட்டுரையின் தமிழ் வடிவம்

# விடியலைப் படையுங்கள் சூரியன்களே



''தனியொரு மனிதருக்கு ணவில்லை - எனில்
இச் செகத்தினை அழித்திடுவோம்''
என்ற பாரதியின் பாட்டு வரிகளைக்
கத்தாத கட்சிக் கொடிகளே இல்லை!
ஆனால் எந்தக் கட்சியாவது - அந்தப்
பாட்டு வரிகளை வாழ்க்கை நெறியாக்க
கொள்கை தீபம் ஏற்றி இருக்கிறதா?

காலம் மாறிக் கொண்டே இருக்கின்றது
கட்சிகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன
ஆனால், அந்தக் கனவு வரிகளுக்குச்
செயல் வடிவம் கொடுக்க யார் சிந்தித்தார்?
அந்தக் கட்சிகள் ஏழ்மையில் இருப்போரின்
ஏக்கங்களைத் தங்களுக்குச்
சாதகமாக்கிக் கொண்டு
முன்னேறிக் கொண்டிருக்கின்றன!

இந்த இருள் சூழ்ந்த உலகில் - தனியொரு
மெழுகுவர்த்தி சாதிக்கப் போவது ஒன்றுமில்லை!
மனித மனங்களிலெல்லாம் 'சிந்தனைத் தீ'
பற்றி எரிய வேண்டும்!
அந்தக் கூட்டுச் சுடரில்தான்
ஒரு கோடி உண்மைகள் புலனாகும்!

வெட்ட வெளிச்சத்தில் வேடிக்கை பார்க்கிறோம்
இருளில் - கூரையின்கீழ்
ஒரு கோடியில் சுருங்கிக் கிடக்கிறோம்!
இந்தக் கண்களுக்கு அதுவா வேலை?
வெட்ட வெளிச்சத்தில்
வேதனைப் படுவோரை
வெட்கிக் காண வேண்டும்!
இருளானவுடன்
கூரையின் அடியில்
ஒரு கோடி எண்ணங்கள் உதயமாக வேண்டும்!

அந்த எண்ணங்களின் உதயத்தில் - ஒரு
சமத்துவ சமுதாயம் உருவாக வேண்டும்!

- இரா. ஸ்ரீகிருஷ்ணன்




பொன் விழாக் கவிதைப் போட்டி

அறிமுக எழுத்தாளர்

19

# காதலெனும் வானவில்

“படிப்பிலே கவனம் செலுத்து” என்று கடந்த ஒன்றரை மாதங்களாக அம்மாவும் அப்பாவும் மைதிலியும் மறைமுகமாகச் சொல்லி வருகிறார்கள். அதை அவர்கள் சொல்ல வேண்டியதன் அவசியமென்ன என்று சில சமயங்களில் மீராவுக்குக் கோபம் வரும். ஹரியுடன் தனக்கு இருக்கும் தோழமையைக் கண்டு இவர்கள் எல்லாருமே பயப்படுவதுதான் உண்மைக் காரணம் என்று பலமான சந்தேகம் ஏற்படும். மைதிலியும் ஏன் பயப்படுகிறாள்? சினேகிதர்களே இல்லாத தன் மகனுக்கு ஒரு சினேகிதி கிடைத்திருப்பது சந்தோஷத்தைக் கொடுக்க வேண்டாமோ?

மைதிலி அன்று சூசகமாகச் சொன்ன பிறகு ஹரியைக் காணப் போகாதது மட்டுமில்லை, அவனுடன் போனில் கூடப் பேசவில்லை. எவ்வளவோ முறை, பேச வேண்டும் என்று நினைத்து, மைதிலியின் வார்த்தைகள் ஞாபகம் வந்து, தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறாள். அவனிடமும் தன்னிடம் சொன்ன அதே வார்த்தைகளை மைதிலி சொல்லியிருக்க வேண்டும். அவன் ஃபோனே செய்யவில்லை. பரீட்சைக்கான தயாரிப்பில் ஆழ்ந்திருந்தது மட்டும் அதற்குக் காரணமாக இருக்க முடியாது. அவனுக்குச் சூட்சுமம் அதிகம். அதனாலேயே அவனுக்குப் பாதிப்பு அதிகமாக இருக்கும் என்று அவளுக்கு விசனம் ஏற்பட்டது. ஆனால் மைதிலியின் சொல்லுக்கு மரியாதை கொடுக்க வேண்டும் என்கிற எண்ணம் அவளைக் கட்டிப் போட்டது. ஹரிக்கும் இது இறுதி யாண்டு என்பதால் மைதிலி செய்த எச்சரிக்கையில் உண்மையில் ஏதும் விபரீத அர்த்தம் இல்லாமலும் இருக்கலாம் என்று அவள் அடிக்கடி தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டாள்.

காலையில் கண் விழித்ததும் நாளையிலிருந்து பரீட்சை ஆரம்பமாகும் என்ற எண்ணம் உற்சாகத்தைக் கொடுத்தது. இனிமேல் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டியது எதுவுமே இல்லை என்கிற தெம்பு ஏற்பட்டு ஒரு வாரத்துக்கு மேல் ஆகியிருந்தது. “சண்டைக்குத் தயாரா இருக்கற ஸோல்ஜர் மாதிரி இருக்கேன்” என்று நேற்று அம்மாவிடம் சொன்னபோது அம்மா திருப்தியுடன் சிரித்தாள். “அதுக்குத் ‘தினவு’ன்னு ஒரு வார்த்தை தமிழ்லே இருக்கு” என்றாள். ‘அப்படீன்னா’ என்று கேட்கும் மனநிலையில் இல்லாமல் தனது டயரியில் அந்த வார்த்தையை மீரா எழுதிக் கொண்டாள். பிறகு ஹரியிடம் விளக்கம் கேட்க வேண்டும் என்று.

கட்டிலை விட்டு இறங்கும் போது இரண்டு தோள்களும் வலித்தன. ‘தினவு’ என்பது தோளில் இருக்கும் என்று அம்மா சொன்னதாக நினைவு. தனக்குள் சிரித்தபடி முண்டா தட்டும் போர் வீரனைப் போல் இரண்டு தோள்பட்டைகளையும் அவள் மாறி மாறித் தட்டிக் கொண்டபோது சுரீரென்று நெற்றிப்பொட்டு வலித்தது. எச்சிலை விழுங்க முடியாமல் தொண்டையில் ஒரு பந்து அமர்ந்திருந்தது. அவள் பதைப்புடன் நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள். லேசாகச் சுட்டது. “ஓ, நோ,” என்ற பிரலாபத்துடன் அவசரமாகத் தெர்மாமீட்டரைத் தேடி நாக்குக்கடியில் வைத்துக் கண்ணை மூடிக் கொண்டாள். ‘காட்! ஜுரம் கிரம் வந்து விடக் கூடாது.’

வந்திருந்தது. நூறு டிகிரி என்று தெர்மாமீட்டர் காட்டிற்று. அவளுடைய நாபியிலிருந்து துக்கம் பீறிட்டுக் கொண்டு அழுகையாய் வெடித்தது. தலையணையைக் குத்தி ‘இட் இஸ் நாட் ஃபேர்!’ என்றாள் பலக்க. அறைக்குள் எட்டிப் பார்த்த மஹேஷ், “அம்மா, மீரா அழறா!” என்று கத்தினான்.

மறு விநாடி அம்மா எதிரில் நின்றாள். “என்ன மீரா, எதுக்கு, எதுக்கு அழறே?” என்றதற்கு மீரா அவளுடைய இடையைப் பிடித்துக் கொண்டு அழுதாள். “எனக்கு அதிர்ஷ்டமேயில்லே. பரீட்சை எப்படி



செய்வேன்னு தெரியல்லே, ஜுரம் வந்திருக்கு. நூறு டிகிரி.''

அம்மா நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். ''அடக் கடவுளே'' என்று தனக்குள் முணு முணுத்துக் கொண்டாள், மீராவின் முதுகை வருடி, ''கவலைப்படாதே'' என்றாள் இதமாக. ''நூறுதானே, மாத்திரை தரேன் சரியாப் போயிடும். இன்னிக்கு முழுக்க ரெஸ்ட் எடுத்துக்கோ.''

''சரியாயிடுமா?'' என்றாள் மீரா நம்பிக்கையில்லாமல், ''இப்பன்னு ஏம்மா ஜுரம் வரணும்?''

''குழந்தை மாதிரி பேசாதே'' என்று சொன்னாலும் அம்மாவின் முகத்தில் கவலை தெரிந்தது. ''நம்ம தைரியத்தைச் சோதிக்கிற மாதிரி இப்படியெல்லாம் வரும்தான்'' என்று விளக்கினாள். ''கலங்கிடக் கூடாது, நான் பிரார்த்தனை பண்றேன்.''

''வெறும் பிரார்த்தனையை நம்பிண்டு நான் இருக்க முடியாது. அடுத்த தெருவிலே ஒரு நர்சிங்ஹோம் இருக்கு. டாக்டர்கிட்ட காண்பிச்சு மருந்து வாங்கிக்கிறேன்.'' ''சரி காண்பி'' என்றாள் அம்மா. ''எப்படிப் போவே? அப்பா கார் எடுத்துண்டு போயிட்டாரே?''

''நா சைக்கிள்லே போறேன். அடுத்த தெருதானே.''

**வாஸந்தி**



"எங்க ஏரியாவிலே பயங்கர துணிகரத் திருட்டு அடிக்கடி நடக்குது சார்."

"டாக்டரை இங்கேயே வரச் சொல்றேனே."

"வேண்டாம், உடம்பு ஒண்ணும் அத்தனை மோசமில்லே. இப்ப அதிக ஜாக்கிரதையா இருக்கணும்னுதான் போறேன்."

அவள் பல் விளக்கித் தயாராகிக் கீழே வந்ததும் அம்மா சூடான காப்பியுடன் தலைவலி மாத்திரை ஒன்றையும் கொடுத்தாள். பிறகு பூஜை அறையிலிருந்து விபூதி சம்புடத்தை எடுத்து வந்து நெற்றியில் இட்டு, "சுவாமி! நீயே துணை" என்றாள்.

"பரீட்சைக்குப் போகும் போதுதானே இதைச் செய்வே?" என்றான் மஹேஷ்.

மீரா அம்மாவைப் பார்த்துப் புன்னகைத்து, "ஜுரம் என்கிறது கூட ஒரு பரீட்சை" என்று கூறி விட்டு சைக்கிளைக் கிளப்பியபோது, "மெள்ளப் போ" என்றாள் அம்மா கவலையுடன்.

தெரு முனையைக் கடக்கும்போது நெற்றியில் இருந்த விபூதி மூக்கில் உதிர்ந்தது. அம்மாவின் நம்பிக்கை அவளையும் தொற்றிக் கொண்டது போலிருந்தது. 'சுவாமி நீயே துணை. நான் பரீட்சையை நல்லாச் செய்யணுங்கறதிலே உனக்கு அக்கறையில்லையா?'

சுவாமிக்கு இதையெல்லாம் ஞாபகப்படுத்த வேண்டி வருவது விசித்திரம் என்று தோன்றியது. "உன்னைப் படைச்சப்புறம் கடவுளுடைய ட்யூட்டி முடிஞ்சது" என்றான் ஹரி ஒரு நாள். "நீ குருடோ முடமோ, கெட்டிக்காரியோ, மக்கோ, நீயா சமாளிச்சுக்கணும்."

அப்படித்தான் அவன் சமாளிக்கிறான் என்று அவள் நினைத்துக் கொண்டாள். வெறும் பிரார்த்தனையினால் கண் வந்து விடாது என்று அவனுக்குத் தெரியும். "என்னாலே முடியும் நீ அதை நம்பணும்."

நர்சிங்ஹோமில் அவளுக்கு முன்னால் நான்கு பேர் வந்து காத்திருந்தார்கள். மூன்று டாக்டர்கள் நடத்தும் நர்சிங்ஹோம் என்பது மூன்று டாக்டர்களின் பெயர்ப் பலகை கொண்ட தனித் தனி அறைகளிலிருந்து தெரிந்தது. அவள் தன்னுடைய முறைக்காகக் காத்திருந்தபோது, ஓர் அறையின் கதவைத் திறந்து கொண்டு ஒரு நர்ஸ் வெளிப்பட்டாள். திறந்த இடைவெளியில அறைக்குள் மீனாட்சி உட்கார்ந்திருப்பது தெரிந்தது. கதவுக்கு முதுகைக் காட்டியபடி அவளுடைய அம்மா அமர்ந்திருந்தாள். கண் இமைக்கும் நேரத்திலும் அவளுடைய நேர்த்தியான அலங்காரம் கண்ணில் பட்டது.

அன்று உடம்பு சரியில்லை என்று வீட்டிற்குக் கிளம்பிப் போன மீனாட்சி பிறகு பள்ளிக்கு வரவேயில்லை. பள்ளியிலிருந்து சஸ்பெண்ட் செய்யப்பட்டதாகப் பராபரியாகக் காதில் விழுந்தது. மைதிலி அதைப் பற்றிப் பேச மறுத்தாள். பரீட்சை எழுதுவாளா என்றும் தெரியாது. மீனாட்சியின் வீட்டிற்கு இரண்டு முறை டெலிபோன் செய்த போது அவள் படுத்திருப்பதாய் வேலைக்காரி சொன்னாள். மீனாட்சிக்கு நிஜமாகவே ஏதோ உடல் கோளாறாக இருக்க வேண்டும் என்று பச்சாத்தாபம் ஏற்பட்டது. "செத்துரலாம் போல இருக்கு" என்று அன்று அவள் அழுதது ஞாபகம் வந்தது. மணியைப் பற்றி மிஸஸ் செல்லப்பனுக்குத் தெரிய வந்திருக்குமா?

அவளுடைய பெயர் கூப்பிடப்பட்டதும் மீரா எழுந்தாள். டாக்டர் தொண்டையைப் பரிசோதித்துவிட்டு மருந்தெழுதிக் கொடுத்தார். "இன்னி. சாயந்திரத்துக்குள்ளே சரியாயிடுவே டோன்ட் வொர்ரி" என்று உற்சாகப்படுத்தினார். அவள் மருந்தை வாங்கிக் கொண்டு வெளியில் வந்த போது ஒரு ஓரமாக நாற்காலியில் மிஸஸ் செல்லப்பன் அமர்ந்திருந்தாள். முகத்தில் கலவரம் பதிந்திருந்தது. மீரா அவள் அருகில் சென்று மெல்ல "ஹலோ ஆன்ட்டி!" என்றாள். தூக்கி வாரிப் போட்டவளாய் மிஸஸ் செல்லப்பன் சுழன்று திரும்பியது வினோதமாக இருந்தது.

"ஓ நீயா?" என்று அரை குறையாகச் சிரித்தாள். "என்ன, உடம்பு சரியில்லையா?" என்றாள் தன்னைச் சுதாரித்துக் கொண்டு.

"ஆமாம் லேசா ஜுரம், நாளைக்குப் பரீட்சைங்கறதனாலே பயந்துகிட்டு டாக்டர்டே ஓடி வந்தேன்," என்றாள் மீரா மெல்லிய புன்னகையுடன். "மீனாட்சிக்கு




"மிகக் குறுகிய காலத்தில் நான் மிகப் பெரிய பதவி உயர்வினைப் பெற்றதற்கு அதிர்ஷ்டம்தான் காரணம் என்று மற்றவர்கள் சொல்கிறார்கள். ஆனால்... ஒரு மனிதனின் முன்னேற்றத்திற்கு அதிர்ஷ்டம் மட்டுமே காரணமாக அமைந்துவிடுவதில்லை என்பதே என் கருத்து"

சில வருடங்களுக்கு முன் நான் ஒரு பிரபல வர்த்தக நிறுவனத்தில் சாதாரண குமாஸ்தாவாகச் சேர்ந்தேன்.

நான் பணிபுரியும் நிறுவனத்தில் நல்ல திறமையுடையவர்களுக்குத் தகுந்த வேலைவாய்ப்புகள் இருப்பதை அறிந்து, உயர்பதவியினைப் பெற ஆர்வமுடன் செயலாற்றினேன்.

ஆனால்... உயர்பதவிகளைப் பெற ஆங்கிலத்தில் போதிய புலமை பெற்றிருப்பது அவசியம் என்பதை நாளடைவில் புரிந்துகொண்டேன்.

"நமக்குத்தான் ஆங்கிலத்தில் தொடர்ந்து நாலு வார்த்தை கூடப் பேச வராதே" என்று எனது முயற்சியை நான் கைவிட்டுவிடவில்லை.

ஆங்கிலத்தைக் கற்றுக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டு, பல புத்தகங்களை வாங்கிப் படித்தேன். ஆனால் இம் மொழியை முழுமையாகப் புரிந்து கொள்ள முடியாமல் கலங்கிக் கொண்டிருந்தேன்.

திசை தெரியாமல் நடுக்கடலில் தத்தளிக்கும் படகோட்டிக்கு கலங்கரை விளக்கம் தென்பட்டதைப் போல, விவேகானந்தா கல்வி நிலையத்தின் ஆங்கிலப் பயிற்சி பற்றிய விளம்பரம் என் கண்ணில் பட்டது.

முயற்சி செய்பவர்களுக்குத் தெய்வம் வலிய வந்து உதவும் என்ற குறளிற்கேற்ப, ஆங்கில மொழியில் புலமை பெற வேண்டும் என்ற எனது முயற்சி வெற்றி பெற விவேகானந்தா கல்வி நிலையத்தின் தபால் முறைப் பயிற்சி பெரிதும் உதவியது.

இப் பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது எந்தச் சூழ்நிலையிலும் தயக்கமின்றி ஆங்கிலத்தில் மிகச் சரளமாகப் பேச முடிகிறது. இதனால் உயர்பதவி என்னைத் தேடி வந்துள்ளது.

எனவே எனது வெற்றியின் ரகசியம் விவேகானந்தா கல்வி நிலையத்தின் ஆங்கிலப் பயிற்சி தான் என்பதில் மிகையேதும் இல்லை அல்லவா?

கீழ்க்கண்ட முகவரியில் நீங்களும் தொடர்பு கொண்டு பயன் பெறலாமே!

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

"நேர்முகப் பயிற்சியும் உண்டு."

உடம்பு சரியில்லையா ஆன்டி?''

''ஆமாம், கொஞ்ச நாளா உடம்பு சரியில்லே,'' என்றாள் மிஸஸ் செல்லப்பன் தன்னுடைய சாயம் பூசின நகங்களைப் பார்த்தபடி. ''இப்பப் பாத்தா வயத்திலே கட்டிங்கறாங்க. அவசரமா ஆபரேஷன் பண்ணணுமாம். உள்ளே அழச்சிட்டுப் போயிருக்காங்க.''

''ஐய்யய்யோ!'' என்றாள் மீரா கண்களை அகல விரித்து. ''முந்தியே கண்டு பிடிக்கல்லியா?''

ஒரு விநாடி அவளை நிமிர்ந்து பார்த்து மிஸஸ் செல்லப்பன் தலையைக் குனிந்து கொண்டாள்.

''கண்டு பிடிக்கல்லே, என்ன செய்யறது?'' என்றாள் ஆற்றாமையுடன்.

மீரா அவளுடைய தோளைப் பற்றி, ''நல்லா ஆயிடுவா ஆன்டி, கவலைப் படாதீங்க,'' என்றாள். ''பரீட்சை முடிஞ்சதும் நா அவளை வந்து பார்க்கறேன்.''

''தாங்க்ஸ்மா'' என்று மிஸஸ் செல்லப்பன் மீண்டும் தலை நிமிர்ந்து அவள் கையைப் பற்றிய போது கண்கள் லேசாகக் கலங்கியிருந்தன.

வீட்டிற்குச் சென்று மீனாட்சியைப் பற்றி அம்மாவிடம் சொன்னதும், ''வயத்திலே கட்டியா, என்ன கூத்து?'' என்று அம்மா கண்களை அகல விரித்தாள்.

''இப்ப அவளைப் பத்தியே நினைச்சிண்டிருக்காதே. மருந்தைச் சாப்பிட்டுக் கொஞ்சம் தூங்கு. நாளைக்குப் பரீட்சை எழுதியாகணும்.''

மீனாட்சியை அம்மா ரொம்பவும் அவசரமாக ஒதுக்கிவிட்டது போல் இருந்தது. ஆனால் பரீட்சையின் ஞாபகப்படுத்தலில் மீராவுக்கே மீனாட்சியைப் பற்றி மறந்து போயிற்று. டாக்டர் சொன்னதுபோல் அன்று மாலை காய்ச்சல் இறங்கிவிட்டது. பலவீனம் ஏற்பட்டுவிடும் என்கிற முன் ஜாக்கிரதையுடன் அம்மா ஜூஸும் ஹார்லிக்ஸுமாக உபசரித்ததில் உடம்பு மீண்டும் பழைய நிலைக்குச் சீக்கிரமாகத் திரும்பி விட்டது. பரீட்சைகளை உற்சாகமாகச் செய்ய முடிந்தது. அவளுடைய சௌகர்யத்துக்காக அப்பா தினமும் அவளைப் பரீட்சை மையத்தில் இறக்கிவிட்டுப் பிறகு அழைத்துச் சென்றார்.

இன்று கடைசி பரீட்சை. மாலையில் அழைத்துச் செல்ல வரவேண்டியதில்லை என்று அவள் காலையில் அப்பாவிடம் சொல்லியிருந்தாள். பரீட்சைக் கூடத்தை விட்டு வெளியே வரும்போது கைகளை உயரத் தூக்கி சந்தோஷ ஆரவாரம் செய்ய வேண்டும் போல் இருந்தது. வகுப்புத் தோழிகளின் முகங்கள் அத்தனை சுரத்தாகத் தெரியாததால் தனக்குள் ஒரு பாட்டை முணு முணுத்தபடி நடந்தாள். சட்டென்று ஹரியின் நினைவு வந்தது. அவன் ஒருத்தனே தன்னுடைய மன நிலையைப் புரிந்து கொள்வான் என்று தோன்றிற்று. எத்தனை நாட்களாகி விட்டன அவனைப் பார்த்து என்று மெல்லிய ஏக்கம் அவளை ஆட்கொண்டது. உடனடியாக அவனைப் பார்க்க வேண்டும் என்று தோன்றிய ஆவலை அவள் அடக்கிக் கொண்டாள். அவனுக்குப் பரீட்சை முடிந்து விட்டதா என்று விசாரிக்காமல் போகக்கூடாது என்று தயக்கம் ஏற்பட்டது.

''ஏ, மீரா!'' என்ற குரல் கேட்டு அவள் திரும்பினாள். நந்தினி மூச்சிறைக்க ஓடி வந்து அவளுடன் சேர்ந்து கொண்டாள்.

''பரீட்சையெல்லாம் எ ப் ப டி ப் பண்ணே?'' என்றாள் மீரா சினேகிதமாக.

''எல்லாம் முடிஞ்சு போச்சு விடு, இனிமே அதைப் பத்திப் பேசி மூடைக் கெடுத்துக்கக் கூடாது'', என்று நந்தினி சிரித்தாள். ''வீட்டுக்குப் போய் இன்னிக்கு நல்ல தூக்கம் போடணும். நாளையிலேந்து தினம் ஒரு சினிமா, நீ என்ன செய்யப் போறே?''

''மொதல்லே மீனாட்சியைப் போய்ப் பார்க்கப் போறேன், பாவம் அவளுக்கு ஏதோ ஆப்ரேஷன் ஆச்சாம்.''

''ஆப்ரேஷன் என்ன, கர்ப்பத்தைக் கலைச்சாங்க!'' என்றாள் நந்தினி பரிகாசம் தொனிக்கும் குரலில்.

(தொடரும்)



''மதிவளுக்கு ஆனைக் கட்டிக்கிட்டு சொல்லிக் எழுக்குன்னு வர்றபோது... கட்டிக்கிட்டு வாய்வையியா....''

''ஏன், என்ன ஆச்சு?''

''மத்த எல்லாரும் விலைவாசி உயர்வு ஒழிக...ன்னு கோஷம் போடும்போது, இவர் மட்டும், 'கர்னாடகா ஒழிக... பங்காரப்பா.... ஒழிக...'ன்னு கத்தறாரே...!''

- ராஜி ராதா

# 'பங்க்' ஸ்டைலில் தலைமுடி!



'பங்க்' என்பது மேற்கத்திய ராக் இசைக்கு வைக்கப்பட்ட பெயர். மெள்ள மெள்ள ராக் பாடகர்களுக்கும் அதுவே பெயராகி, பின்னர் அவர்கள் உடுத்தும், சிகை திருத்தும் முறைகளுக்கும் 'பங்க்' என்ற பெயரே ஒட்டிக் கொண்டது.

இப் பாடகர்கள் வித்தியாசமாகத் தோன்ற வேண்டும் என்பதில் மிகவும் குறியானவர்கள். தலை முடியை நீல, ரோஸ் வண்ணங்களில் 'டை' அடித்துக் கொள்வது, காதில் வளையம் அணிந்து கொள்வது (ஆண்கள்), பளபளப்பான பூட்ஸ்களுடன் கிழிந்த ஜீன்ஸ், கூலிங் கிளாஸ் என்று விசித்திர கலவையாக உடுத்துவதே 'பங்க் ஸ்டைல்'.

பங்க் ஸ்டைலின் இந்திய இறக்குமதி முகத்தில் அறைவது போல் வித்தியாசமாய் இல்லாவிட்டாலும் தனித்தன்மையுடையது தான்.

- ஜூலி

படங்கள் : யோகா



**ஃபேஷன் பக்கம் :**



# லில்லி உள்பாவாடைகள் தயாரிப்பாளர் கரூர்

## P. R. C. கார்மெண்ட்ஸ்சாரின் பெண்களுக்கான ஓர் அரிய பரிசுப் போட்டியின் முடிவுகள்.

இப் போட்டியில் கலந்து கொண்டு சரியான மொழிமாற்ற வரைவுகளை (Translated Drafts) அனுப்பி வைத்த ஆயிரக்கணக்கான பெண்களில் 100 பெண்மணிகளின் வரைவுகள் கடந்த 6.2.1992-ம் தேதியன்று கரூர் கிளை கனரா வங்கி உயர் அதிகாரிகள் மற்றும் தொழிலதிபர்கள் முன்னிலையில் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். குலுக்கலில் பரிசு பெற்ற 100 பெண்மணிகளின் பெயர் மற்றும் ஊர் விவரங்கள் கீழே அறிவிக்கப்பட்டுள்ளன. இவர்கள் அனைவருக்கும் தரம் மற்றும் வடிவமைப்பில் சிறந்த இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் தபாலில் அனுப்பி வைக்கப்படும். மேலும் பரிசு பெற்றவர்களுக்கு தனித்தனியாக பரிசு பெற்ற விவரம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

**பரிசு பெற்றவர்களின் விவரம் :**

1) ஆர். கிரிஜா, கரூர்-1. 2) மிஸ். சுமதி விஸ்வநாதன், மதுரை - 1. 3) மிஸ். ஆர். லெக்ஷ்மி, கும்பகோணம் - 1. 4) வி. செல்லியம்மாள், ராஜபாளையம். 5) சி. ஜெ. லெக்ஷ்மி, காரைக்குடி - 2. 6) மிஸ். வி. முத்துலெக்ஷ்மி, நாகப்பட்டினம். 7) ஏ. கங்கா, ஈரோடு. 8) அன்னிமேரி பெர்னான்டஸ், திருச்சி - 30. 9) திருமதி. சரோஜினி விபா, சென்னை - 4. 10) திருமதி. பி. உஷா, ஈரோடு - 2. 11) ஆர். கீதா, மன்னார்குடி - 614 001. 12) மிஸ். எம். மைதிலி, சென்னை - 75. 13) ஜி. கமலாகுமாரி, சென்னை - 47. 14) ஜெயந்தி சத்தியமூர்த்தி, சென்னை - 28. 15) ஜி. யோகேஷ்வரி, கோவை - 46. 16) எஸ். கமலா, புள்ளமங்கலம் - 610 206. 17) திருமதி. ஆர். விஜயலெக்ஷ்மி, சென்னை - 10. 18) ஜெ. பிரேமலதா, தேனி. 19) திருமதி. எம். எஸ். லலிதா, கோவை - 5. 20) திருமதி. ஜானகி, நெய்வேலி - 607 803. 21) வி. கௌரி, சென்னை - 40. 22) திருமதி. ஆர். பத்மினி, சென்னை - 35. 23) ஆர். மாலதி, கடலூர் - 1. 24) பி. சுவர்ணம், சென்னை - 28. 25) மிஸ். சுதா விஜய், சென்னை - 36. 26) திருமதி. சி. தர்மபாலன், திருச்சி - 17. 27) ஜரினா, நாகப்பட்டினம். 28) எம். ஜோஸ்பைன், திருச்சி - 8. 29) எம். சௌம்யா, தஞ்சாவூர். 30) ஜி. செண்பகவல்லி, திருச்சி - 14. 31) எஸ். பாரதி, கரூர் - 1. 32) திருமதி. பி. சகுந்தலா, திருச்சி - 21. 33) எஸ். ஷாஹிதாபேகம், சேலம் - 1. 34) ஆர். சரோஜினி, மானாமதுரை - 623 606. 35) எக்ஸ். செல்வி, கரூர் - 1. 36) லெக்ஷ்மி, பம்பாய் - 80. 37) ஜி. பத்மா, திருச்சி - 15. 38) திருமதி. சாந்தி பால்டின், சேலம் - 5. 39) என். விஜயலக்ஷ்மி, திண்டுக்கல் - 5. 40) திருமதி. வி. மீனாக்ஷி, மதுரை - 3. 41) எஸ். ஜெயஸ்ரீ, SHAHDA - 425 409 (மஹாராஷ்டிரா). 42) எஸ். சுந்தரி, சென்னை - 30. 43) வி. ஸ்ரீவிமலா, சென்னை - 94. 44) மிஸ். சீமா ரிஷிகேஷ், காலிகட் - 673 017 (கேரளா). 45) பி. எஸ். சீதாலெக்ஷ்மி, BIKANER - 334 001 (ராஜஸ்தான்). 46) சந்திரா ஜகதீசன், சென்னை - 44. 47) ஏ. மீனாட்சி, விருதுநகர். 48) ஏ. சரோஜா, கும்பகோணம் - 1. 49) எலிசபத் பிலிப், கோவை - 101. 50) ஆர். ரேவதி, சென்னை - 28. 51) லில்லி பங்காரு, தஞ்சாவூர். 52) எஸ். சாரதா, நாகர்கோவில் - 2. 53) கே. சுவர்ணம், சென்னை - 78. 54) எஸ். திலகம், வாலாஜாபேட்டை - 632 513. 55) திருமதி. புஷ்பா விஜயராகவன், கொச்சின் - 15 (கேரளா). 56) திருமதி. ஜெ. புவனேஸ்வரி, அண்ணாமலைநகர் - 608 002. 57) வி. வைதேகி, பெங்களூர் - 40. 58) மிஸ். என். உமாமகேஸ்வரி, புதுக்கோட்டை - 1. 59) எஸ். சுவர்ணம், உத்யோகமண்டல் - 683 501 (கேரளா). 60) மிஸ். எஸ். கலோசனா, சென்னை - 24. 61) வி. பார்வதி, கோவை - 12. 62) எஸ். சுஜாதா, மங்கலம்பேட்டை - 606 104. 63) திருமதி. பார்வதி ஹரிஹரன், பெங்களூர் - 38. 64) திருமதி. கரோலின் பிரான்சிஸ், சென்னை - 4. 65) எஸ். வைரமணி, திருச்சி - 8. 66) எம். கிருஷ்ணவேணி, மதுரை - 16. 67) திருமதி. மலர்மணி, மதுரை - 16. 68) கற்பகம் சுந்தரராஜன், நாக்பூர் - 440 025 (மஹாராஷ்டிரா). 69) எஸ். வித்யா லெக்ஷ்மி, சென்னை - 92. 70) திருமதி. கே. சந்திரா, கும்பகோணம் - 1. 71) ஜெ. சந்தியா, சென்னை - 50. 72) திருமதி. கமலா சாரதி, செங்கல்பட்டு. 73) திருமதி லதா நடேசன், சென்னை - 49. 74) பி. சுமதி, ராசிபுரம் - 637 408. 75) திருமதி. என். எஸ். அன்னபூர்ணா, நாக்பூர் - 440 617 (மஹாராஷ்டிரா). 76) திருமதி. ராஜேஸ்வரி கபாலி, சீர்காழி - 609 110. 77) ஆர். சாந்தி, அரவக்குறிச்சி - 639 201. 78) ஏ. ரஜியா சுல்தானா, காரைக்கால் - 609 602. 79) ஆனந்திராமசாமி, திருச்சி - 21. 80) மஹாருன்னிஸா, திருச்சி - 20. 81) திருமதி. சாவித்திரி விஸ்வநாதன், உடுமலைப்பேட்டை. 82) வி. சுபா, சென்னை - 24. 83) கே. திலகம், கோவை - 6. 84) மிஸ். ரஜனி, பம்பாய் - 89. 85) சாரதா விவேகானந்தன், சிவகாசி - 626 123. 86) மிஸ். சாந்தாலெக்ஷ்மி, சோமனூர் - 638 668. 87) எஸ். வசந்தா, மதுரை - 3. 88) திருமதி. கோமதி ரவி, கோவை - 41. 89) ஸ்ரீமதி. கே. வி. ராஜலெட்சுமி குமார், கோவை - 26. 90) திருமதி. ஜானகி வெங்கடேஷ்வரன், கரூர் - 2. 91) லெக்ஷ்மி ராமசுப்பிரமணியம், தானே (W) 400 601 (மஹாராஷ்டிரா). 92) கே. ஜலஜா, கோவை - 43. 93) வி. வைதேகி, பெங்களூர் - 40. 94) ஆர். விஜயலெக்ஷ்மி, சென்னை - 2. 95) திருமதி. எஸ். பிரேமா, கும்பகோணம். 96) திருமதி. லெட்சுமி ஸ்ரீனிவாசன், சென்னை - 24. 97) திருமதி. ஈவ்லின், கோவை - 1. 98) எஸ். அபிராமி கல்பனா, சென்னை - 12. 99) ஜெ. கிரேஸ்மேரி, கரூர் - 2. 100) திருமதி. கே. கே. பார்வதி, புதுடெல்லி - 110 003.

## ‘லில்லி’ உள்பாவாடைகள் தயாரிப்பாளர்

# கரூர் P.R.C. கார்மெண்ட்ஸ்ஸாரின்

### இரட்டிப்புப் பயன் தரும் புதுமையான திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

| டிசைன் நெ. 1 | டிசைன் நெ. 2 |
| --- | --- |
|  |  |

**திட்டத்தின் விவரம் :**

ரூபாய் 210/- செலுத்தியவுடன் ஐந்து லில்லி, உள்பாவாடைகள் (Normal Size, இடுப்புச் சுற்றளவு அதிகபட்சம் 35"/88 cms., உயரம் 36"/90 cms., 38"/95 cms., 40"/100 cms., 42"/105 cms.)

(அல்லது)

ரூபாய் 250/- செலுத்தியவுடன் ஐந்து லில்லி உள்பாவாடைகள் (Spl. Size : இடுப்புச் சுற்றளவு : 40"/102 cms, உயரம் : 36"/90 cms., 38"/95 cms., 40"/100 cms., 42"/105 cms.) உங்களுக்கு விருப்பமான கலரில், தேவையான அளவுகளில் பதிவுத் தபால் மூலம் பெற்றுக் கொள்கிறீர்கள். வெளிமார்க்கெட்டில் கிடைக்கும் அதே விலையில் ஒன்றின் விலை (Normal Size : ரூ. 42/ Spl. Size : ரூ. 50/).

இவ்வாறு குறைந்த பட்சம் ஒரு வருடத்திற்கு இரண்டு முறை மொத்தம் 10 லில்லி உள்பாவாடைகள் வீதம் ஐந்து வருடத்திற்கு நீங்கள் பணம் செலுத்தியவுடன் எங்களிடமிருந்து லில்லி உள்பாவாடைகள் பெற்றுக் கொள்கிறீர்கள்.

மேற்படி ஐந்து ஆண்டுகளில் நீங்கள் பெற்றுக் கொண்ட லில்லி உள்பாவாடைகளுக்காக செலுத்திய பணம் முழுவதையும் (அதாவது ஒவ்வொரு முறையும் நீங்கள் செலுத்திய பணம் ரூ. 210/- அல்லது ரூ. 250/- வீதம் ஐந்து ஆண்டுகளில் 10 முறை செலுத்திய தொகை ரூபாய் 2,100/- அல்லது ரூபாய் 2,500/-) ஆறாவது ஆண்டு துவக்கத்தில் திரும்பப் பெற்றுக் கொள்ளுகிறீர்கள்.

இத்திட்டத்தின் மூலம் உங்கள் தேவைக்கு தரத்தில் சிறந்த, வண்ணம் கலையாத வடிவமைப்பில் சிறந்த மற்றும் தேவையான அளவுகளில் லில்லி உள்பாவா டைகள் பெற்றுக் கொள்வதுடன் நீங்கள் செலுத்திய பணத்தையும் திரும்பப் பெற்றுக் கொள்கிறீர்கள்.

இத்திட்டத்தில் இந்தியாவில் எந்தப் பகுதியில் உள்ளவரும் சேர்ந்து பயனடையலாம். Normal Size ரூ. 210/-; Spl. Size ரூ. 250/-. உங்கள் தேவைக்கு D.D. அல்லது M.O. கீழ்க்கண்ட முகவ ரிக்கு அனுப்பி வைக்கவும்.

# P.R.C. கார்மெண்ட்ஸ்,

## லில்லி உள்பாவாடைகள் தயாரிப்பாளர்,

26, பிரதட்சணம் ரோடு, ‘ஏ’ பிளாட்,

கரூர் - 639 002. தொ.பே.: 21946.

குறிப்பு : 1) தபால் செலவை எங்கள் நிறுவனமே ஏற்றுக் கொள்கிறது. 2) Normal Size டிசைன் நெ. 1 & 2 ல் கிடைக்கிறது. Spl. Size டிசைன் நெ. 1 ல் மட்டும் கிடைக்கிறது. 3) இத் திட்டத்தில் வியாபாரிகளும் கலந்து கொள்ளலாம். விவரங்களுக்கு எமது நிறுவனத்துடன் தொடர்பு கொள்ளவும்.

பம்பாய் மகாலக்ஷ்மியின் அருட் பார்வை வீச்சில் நனைந்தபடி அக் கோயி லின் எதிரே பிரம்மாண்டமாய்க் காட்சி யளிக்கிறது காட்பரி ஹவுஸ். இந் நிறுவ னத்தின் சாக்லேட் தொழிற்சாலைகள் இந் தூரி, தாணா, மலான்பூர் என்று மூன்று இடங்களில் இயங்குகின்றன - காட்பரி நிறு வனத்தின் மொத்த வியாபாரம் சீக்கிரமே ஆண்டொன்றுக்கு இருநூறு கோடி ரூபாயைத் தொட்டு விடும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. இதற்குக் காரணம் பம்பாய் மகாலக்ஷ்மியின் கடாட்சம் மட்டு



# சாக்லேட்: சுவையான தகவல்கள்

மல்ல என்று எல்லா சாக்லேட் பிரியர் களும் அறிவார்கள். எத்தனையோ வித மான சாக்லேட்கள் சந்தைக்கு வந்து விட்ட பிறகும் காட்பரீஸின் மவுசும் மணமும் அப்படி கவர்ந்திழுக்கிறதே!

'இந்த வெற்றியின் ரகசியம் என்ன...?' காட்பரி நிறுவனத்தின் வைஸ் - பிரசி டெண்ட் டி.ஒய்.ஜி. கிருஷ்ணமூர்த்தியைச் சந்தித்துக் கேட்கிறோம் :

''எல்லோரும் செய்யும் வற்றல் குழம்பை நம் பாட்டி செய்யும் போது, அவர் கை மணத்தால் அது பக்குவம் பெறு கிறதல்லவா...? அது போல்தான் சாக் லேட்டும். யார் தயாரித்தாலும் நன்றாகத் தான் இருக்கும். ஆனால் காட்பரீஸின் அனுபவம் வாய்ந்த கைப்பக்குவம் தனி தான்.... நாசி, நாவு, நயனங்கள் என மூன்று புலன்களை ஒரே சமயத்தில் மலர்ச்சியடையச் செய்வது எங்கள் நோக் கம். இந்தத் தொழிலின் மூலம் நாங்கள் ஓர் உணவுப் பொருளை விற்பதாக நினைக்க வில்லை; ஒரு பாசம் கலந்த பரவசத்தைப்

☛ காட்பரி...



பரப்புவதாக எண்ணுகிறோம்... இது ஓர் இனிமையான அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளும் கலை...'' என்று அடுக்குகிறார் கிருஷ்ணமூர்த்தி.

அவரைக் 'காட்பரி' உலகிலிருந்து நினைவுல குக்கு இழுக்கும் வித மாக இத்தொழிலில் உள்ள சவால்கள் பற்றிக் கேட்கிறோம்.

''வாடிக்கையா ளர்களின் எதிர்பார்ப்பு தான் எங்களுக்கு மிகப் பெரிய சவால். அவர்கள் தினமும் எழுதும் கடிதங் களி லிருந்து காட்பரி யிடம் அவர்களுக்கு உள்ள நம்பிக்கையும் பற்றுதலும் தெரிகிறது. அதற்குத் தகுதியுடைய வர்களாய்த் தொடர்ந்து இருக்க வேண்டும் என்று ஒவ்வொரு கண மும் முயன்று வருகி றோம்.



...சில காட்சிகள்



தொழிற்சாலை...

''சாக்லேட் தயாரிப்பில் பக்குவம் மிகவும் முக்கியம். வாயில் போட்டவுட னேயே குழைந்து, கரைந்து மணமான சுவையை வெளிப்படுத்துகிறதல்லவா? தயாரிப்பு நேரத்தில் ஒரு மணித் துளி வித்தியாசம் உண்டானாலும் இந்த குணங்கள் மாறுபட்டு விடும். சுவை மாறி விடும். அதனால் கண் குத்திப் பாம்பாகப் பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். சாக்லேட்களின் சுவையைச் சரிபார்க்க வென்று தொழிற்சாலையில் 'டேஸ்டர்கள்' இருக்கிறார்கள். 74 வகை இனிப்புச் சுவைகளை இனம் பிரித்துக் கூறும் வல்லமை உடையவர்கள் இவர்கள்! துளி மாறுபாடு இருந்தாலும் தயாரிப்பு நிலை யிலேயே சாக்லேட்களை நிராகரித்து விடு வார்கள்!

''வெயில் காலத்தில் ஏ. ஸி. செய்யப் பட்ட வான்களில்தான் விநியோகம். இமய மலைச் சாரல் முதல் ராஜஸ்தான் பாலை வனம் வரை இந்தியாவின் பல மூலை முடுக்குகளிலும் எங்கள் சாக்லேட் இன்று கிடைக்கிறது. இது ஒரு சாதனை மட்டும் அல்ல சவாலும் கூட. எல்லா இடங்களி லும் சாக்லேட்டைத் தரம் கெடாமல் பாது காக்கும் வழிமுறைகளை எங்களுடைய 650 விநியோகஸ்தர்களுக்கும் பயிற்றுவிக்கி றோம். தவிர, அடிக்கடி சின்ன ஊர்களில் விற்பனை நிலையங்களைப் பார்வை யிட்டு, தட்பவெப்ப நிலை காரணமா கவோ, சுகாதாரக் கேடினாலோ தரம் குறைந்திருப்பின் அந்த சாக்லேட்டுகளை அப்புறப்படுத்துகிறோம்.

''விளம்பரம், வரிகள், தரக் கட்டுப் பாடு என்று பல வகையில் ஏகப்பட்ட செலவுகள்... நிகர லாபம் வாடிக்கையாளர் முகத்தில் தோன்றும் புன்னகைதான்!'' என்று கூறுகிறார் கிருஷ்ணமூர்த்தி.

''அப்படி என்றால், அமுல்,காம்ப்கோ, நெஸ்லே, லோடஸ் எனப் பல நிறுவ னங்கள் சாக்லேட் தயாரிக்க ஆரம்பித்துள்ள தற்கு என்ன காரணம்?''

''சாக்லேட் எல்லோருக்கும் பிடித் திருப்பதுதான் காரணம். இன்னும் நிறைய

வியாபாரம் ஆகும்... ஆனால் எங்களுக்குப் பாதிப்பு இருக்காது... நாங்கள் இத் துறையில் வேரூன்றி விட்ட முன்னோடிகள்.''

இருபத்தைந்து ஏக்கர் நிலத்தில், 1100 தொழிலாளர்களுடன் பரந்து விரிந்து நிற்கிறது காட்பரீஸ் தொழிற்சாலை.

விசேஷ அனுமதி பெற்று, கோட், தொப்பி, கையுறை அணிந்து செல்கிறோம்.

பார்வையாளர்களுக்கென மாதிரிக்கு ஒரு கோகோ செடியை முன் வாசலில் வைத்திருக்கிறார்கள். சற்றே பப்பாளி மரச் சாயலில், ஆளுயரத்துக்கு இருக்கிறது. பெருத்த பாதாம் பருப்பு அளவில் 'கோகோ பீன்ஸ்'கள் காய்த்துத் தொங்குகின்றன.

## சாக்லேட்டால் ஆரோக்கியம் பாதிக்கப்படுமா?

### டாக்டர் வி. டி. பலராமன் கூறுகிறார் :

சராசரி ஆரோக்கியம் உள்ளவர்களுக்கு சாக்லேட் சாப்பிடுவதால் உடல்நிலையில் பாதிப்பு ஏற்படாது. சாக்லேட்டில் 60 முதல் 70 சதவிகிதம் கார்போஹைட்ரேட் சத்துதான் இருக்கிறது. இளைப்பான உடல்வாகு உடையவர்களால் இதை எளிதில் 'எரித்து' விட முடியும். பருமனான தேகம் உடையவர்களுக்குத்தான் பிரச்னை. அடிக்கடி சாக்லேட் சாப்பிடுவதால் எடை கூடும். உடன் விளைவாகச் சிக்கல்கள் வரலாம்.

சாக்லேட் சாப்பிட்ட பிறகு வாய் கொப்பளிக்காமல் இருந்தால் பற்களில் கறையும் சொத்தையும் உண்டாகும். கீழ்ப் பற்களைக் கீழிருந்து மேலும் மேல் வரிசைப் பற்களை மேலிருந்து கீழுமாகத் தேய்க்க வேண்டும். இல்லாவிட்டால் சாக்லேட்டுடன் இதர உணவுத் துகள்களும் ஈறுகளை ஒட்டித் தேங்கி, பாக்டீரியா உருவாக வழி செய்யும். வேறு நோய்களுக்கும் இதுவே காரணமாகும்.

மஞ்சள் காமாலை போன்ற கடும் நோய்களால் உடல் நலிந்தவர்களுக்கும் சரியாகச் சாப்பிடாத குழந்தைகளுக்கும் நாங்களே சாக்லேட் கொடுக்கச் சொல்லி சிபாரிசு செய்கிறோம். சர்க்கரை வியாதிக்காரர்களுக்குத் தீவிர சிகிச்சை காரணமாகச் சர்க்கரை அளவு அபாயகரமாகக் குறைந்தால் 'சாக்லேட் பார்களை'ச் சாப்பிட்டு விரைவில் ஈடுகட்டச் சொல்கிறோம். மேல்நாடுகளில், டயபடீஸ் உள்ளவர்களுக்கென்றே தனி ரக சாக்லேட்டுகள் கிடைக்கின்றன.

- பானுமதி இராமச்சந்திரன்



டாக்டர் பலராமன்

கோகோவின் நறுமணம் நாசியை வருட உற்பத்திப் பகுதிக்குள் நுழைகிறோம். தயாரிப்புப் பிரிவின் தலைவர் எல். என். கவுல் விளக்குகிறார் :

''முதலில் கோகோ பீன்ஸைச் சுத்தம் செய்து பெரிய 'ரோஸ்டர்'களில் 140 டிகிரி சென்டிகிரேட் வெப்ப நிலையில் வறுப்போம். வறுக்க, வறுக்க விதைகளின் மேல் பகுதி கெட்டிப் பட்டு நறுமணம் கூடும். அடுத்த இயந்திரம் இவற்றைச் சின்னச் சின்னதாக உடைத்து, வேகமாகக் காற்றைச் செலுத்தி, கடினப்பட்டுப் போன மேல் பகுதியைத் தனியே பிரித்தெடுத்து விடும். (winnowing அதாவது புடைப்பது என்று இதற்குப் பெயர்) எஞ்சும் விதைகளை அரவை இயந்திரங்களில் இட்டு அரைப்போம். சாக்லேட் நிறத்தில், 'சாக்லேட் லிக்கர்' என்ற திரவம் உருவாகும். ஆறிய பின் கெட்டிப்படும் இந்த லிக்கரில் 55 சதவிகிதம் 'கோகோ பட்டர்' (வெண்ணெய்) அடங்கியுள்ளது.

''எண்பது கிலோ கோகோ பட்டருடன் இருபது கிலோ கோகோ தூள் கலந்து கொள்வோம். பூனாவிலிருந்து, காய வைத்துப் பொடி செய்யப்பட்ட சாக்லேட் மணமுள்ள கன்டன்ஸ்ட் மில்க் கிடைக்கிறது. இதைச் 'சாக்லேட் கிரம்ப்ஸ்' என்று அழைப்போம். கோகோ பட்டர், கோகோ தூளுடன் சாக்லேட் கிரம்ப்ஸும் பெரிய இயந்திரத்தில் கலக்கப்பட்டு விழுதாக மாற்றப்படுகிறது. விழுதிலிருந்து தேவையற்ற வாசனைகள் நீக்கப்பட்டு, அவசியமான மணம் அதிகரிக்கப்படுகிறது.

''இவ்வாறு தயாரித்த விழுதைச் சற்றே இளக்க வேண்டும். பிறகு நிலைப்படுத்த வேண்டும். இதுவே மிக முக்கியமான கட்டம். காட்பரீஸின் புகழ்பெற்ற மிருதுத் தன்மை, பளபளப்பு, மணம், தரம் யாவும் இம்மி பிசகாமல் நிலை நிறுத்தப்பட வேண்டும். இளகிய விழுதைத் தேவையான வடிவமுள்ள அச்சுகளில் ஊற்றி, இயந்திரங்களில் குளிர்விக்கிறோம். எந்த அளவுக்குக் குளிர்வித்தால் சாக்லெட்டின் கொழுப்பு நிலையாகக் கெட்டிப்படுமோ அந்த அளவுக்கு மிகக் கவனமாக, கச்சிதமாகக் குளிர்விக்கிறோம். இதுவே tempering எனப்படுவது....''

தயாரான சாக்லேட்டுகள் இயந்திரங்களால் பொன்நிறத் தாள் கொண்டு சுற்றப்படுகின்றன. பிறகு மெட்டல் டிடெக்டர் பரிசோதனைக்கு உள்ளாகின்றன! இதன் பிறகு காட்பரி எழுத்து அச்சிட்ட தாள்களில் சுற்றப்பட்டு வெளிவருகின்றன.

''மெட்டல் டிடெக்டர் எதற்கு? பல்வேறு இயந்திரங்கள் வழியே வரும் சாக்லேட்டில் நம்மையறியாமல் எதுவும்

கரும்புகள் நிறைந்த வண்டி
சக்தி சர்க்கரை ஆலையை நோக்கி
செல்வதைக் காணும் போதெல்லாம்...

# "சக்தி பைனான்ஸில் மட்டுமல்ல 500 கோடி ரூபாய் மதிப்புடைய சக்தி குழுவிலும் நான் அங்கம் என்று அகமகிழ்கிறேன்"

சக்தி பைனான்ஸில் டிபாசிட்தாரர் ஆழமான நம்பிக்கை கொண்டிருப்பதில் வியப்பேது?

ஒவ்வொரு வினாடியிலும் ஒவ்வொரு நாளிலும், ஒவ்வொரு ஆண்டிலும் அமோகமாக வளரும் நம்பிக்கை.





**எங்களைப் பெரிதும் நம்பும் வாடிக்கையாளர்களில் நீங்களும் ஒருவராகுங்கள்**




## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

டாக்டர் நா. மகாலிங்கம் - தலைவர்

பதிவு அலுவலகம்: 475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர்-641 018.

UIPC SF 21



## கோகோவின் கதை

டான் கார்டெஜ் என்ற ஸ்பானிஷ்காரர் 1519-ல் மத்திய அமெரிக்கா சென்ற போது, அஜ்டெக் இன மன்னன் அவருக்குத் தங்கக் கோப்பையில் கோகோ பானம் அளித்து உபசரித்தான். அதன் சுவையில் மயங்கிய கார்டெஜ் கோகோ விதைகளை ஸ்பெயினுக்கு எடுத்துச் சென்றார். பதினேழாம் நூற்றாண்டின் மத்தியில் கோகோ இங்கிலாந்தில் அறிமுகமாயிற்று.

1853 இல் இங்கிலாந்தில் தொழில் புரட்சி நடந்த பிறகே, தனவந்தர்களின் பிரத்யேகப் பானமாக இருந்த கோகோ சாதாரணர்களையும் வந்தடைந்தது.

விக்டோரியா மகாராணி காலத்தில் கோகோவைக் கொண்டு சாக்லேட் தயாரிப்பது ஆரம்பமாயிற்று. ஜான் காட்பரி என்ற துடிப்பான இளைஞர் கோகோ வியாபாரம் ஆரம்பிக்க, அது விரிவடைந்து சாக்லேட் மற்றும் கோகோ பானங்கள் தயாரிப்புத் தொழிலாக உருப்பெற்றது.

இன்று ஐம்பதுக்கும் மேற்பட்ட நாடுகளில் காட்பரீஸ் கிளைகள் உள்ளன.

இந்தியா சுதந்திரமடைந்த மறு வருடத்தில் காட்பரீஸ் இங்கு பிரவேசித்தது. விநியோகம் மட்டுமே செய்து வந்த நிறுவனம் சாக்லேட் தயாரிப்பிலும் விரைவில் நுழைந்தது.

'முடியவே முடியாது!' என்று அரசால் கைவிடப்பட்ட கோகோ விளைச்சலில் ஒரு புரட்சியைச் செய்து காட்டியது காட்பரீஸ். கேரளாவில் கோகோ ஆராய்ச்சி நிலையம் நிறுவி, உழவர்களுக்கு இலவசமாக உயர் ரகக் கோகோவை அறிமுகப்படுத்தி, சாகுபடி முறையில் பயிற்சி அளித்து, விளைச்சலினால் கிடைக்கும் லாபங்களை எடுத்துச் சொல்லி... நம்பிக்கையூட்டியது.

விளைவு : இன்று கர்நாடகா, கேரளா மாநிலங்களில் கோகோ பயிர் தழைப்பது மட்டுமின்றி, ஏற்றுமதி செய்யுமளவுக்கு இந்தியா இத்துறையில் முன்னேறியுள்ளது!

தகவல்கள் : ராமச்சந்திரன் (மக்கள் தொடர்பு அதிகாரி - காட்பரி)

தொகுப்பு : ஜெ

அந்நிய விஷயம் புகுந்து விடக் கூடாதே என்ற கவலையில் ஒரு முன்னெச்சரிக்கை நடவடிக்கை -அவ்வளவுதான்.''

**சா**க்லேட்டின் சுவைக்கேற்ப தயாரிப்பு முறையில் சிறு வேறுபாடுகள். வண்ண வண்ண பட்டன்களைப் போன்ற 'ஜெம்ஸ்' தயாரிப்பு கண்கொள்ளாக் காட்சி: முதலில் -23 டிகிரி சென்டிகிரேட் வெப்பத்தில், பூந்தி தேய்ப்பது போல் சின்னச் சின்ன பட்டன்களாகச் சாக்லேட் ஓர் உருளைக்குள் செதுக்கப்படுகிறது. மற்றொரு உருளையில் சர்க்கரை மாவுக் கலவை இருக்கிறது. முதல் உருளையிலிருந்து வெளிவரும் பட்டன்களின் மேல் இந்தக் கலவை 'ஜம்'மென்று உட்காருகிறது. ஆறிய பின் 'வண்ணம்' (Bee's wax polish) 'பூசிக் கொண்டு' 'ஜெம்' மாக உருமாறுகிறது.

சாக்லேட்களின் எடையைச் சரிபார்க்க ஆங்காங்கே இயந்திரங்கள் பொருத்தப்பட்டுள்ளன. தரக் கட்டுப்பாடு சிப்பந்திகள் அவ்வப்போது எடையைச் சரிபார்த்த வண்ணமிருக்கிறார்கள்.

''எடையோ, வடிவமைப்போ சரியாக அமையாத சாக்லேட்களைத் தனியே நீக்கி மீண்டும் தயாரிப்பின் ஆரம்ப நிலைக்கு அனுப்பி விடுவோம்; 'வேஸ்ட்' பண்ணுவதில்லை'' என்கிறார் கவுல்.

''தயாரிப்பு ரகசியங்களை எப்படிக் காப்பாற்றுவீர்கள்...? இப்போது போட்டி அதிகரித்து விட்டதே?''

''இந்தத் தொழிற்சாலை வெள்ளி விழா கண்டு விட்டது. இதன் தொழிலாளர்கள் குறைந்தது பதினைந்து வருட சர்வீஸ் உள்ளவர்கள். பல நலத் திட்டங்கள் மூலமாக அவர்களுடைய விசுவாசத்தைப் பெற்றிருக்கிறோம்... அதனால் ரகசியங்கள் எளிதில் வெளியே போகாது... மேலும் இதர தயாரிப்பாளர்களுடன் போட்டி போடத்தான் அவ்வப்போது ஏதேனும் புதுமைகளைப் புகுத்திக் கொண்டே இருக்கிறோமே...!'' என்கிறார் தொழிற்சாலை டைரக்டர் காய்ரே.

மனத்தின் மூலையில் எட்டிப் பார்த்துக் கொண்டேயிருந்த இன்னொரு சந்தேகத்தையும் வெளிப்படுத்துகிறோம் :

''இத்தனை வித சாக்லேட்களை இத்தனை தொழிலாளர்கள் இ ன மு ம் கையாள்கிறார்களே... உ ற் ப த் தி ய ா கும் அனைத்தும் வி ற் ப னை க் கு வருமா...?''

''வேலையில் சேர்ந்த புதிதில் ஓரிரண்டு சாக்லேட்டுகளைச் சாப்பிட்டுப் பார்க்கத் தோன்றலாம். வருடக் கணக்கில் வேலை செய்பவர்களுக்குத் திகட்டி விடாதா...? ஆனால் எத்தனை வருடங்களானாலும் வாடிக்கையாளர்களுக்குத் திகட்டி விடாமல் பார்த்துக் கொள்வதே எங்கள் குறிக்கோள்'' என்று சிரிக்கிறார் காய்ரே.

**- ஜெயஸ்ரீ ராஜ்**

அட்டை வண்ணப்படம் : **யோகா**

அட்டையில் : **அருணா ராகி**

## உங்கள் செல்வம் :

"அந்நியச் செலாவணி கையிருப்பு" என்ற சொற்தொடர் அடிக்கடி அடிபடுகிறது. சில காலம் முன்பு நமது அந்நியச் செலாவணி கையிருப்பு மிக மோசமான கட்டத்தை அடைந்ததன் விளைவாக, நாம் அயல் நாட்டில் நமது தங்கத்தை அடகு வைத்து 200 மில்லியன் டாலர் கடன் வாங்க நேர்ந்தது என்பதும் நினைவிருக்கும். ஒரு தனி நபர் வங்கியில் கணக்கு வைத்துக் கொண்டு பல்வேறு செலவுகளுக்கு அவ்வப்போது காசோலை வழங்கு

# அந்நியக் கடன் தீருமா? இந்திய நாடு நிமிருமா?

கிறார். அவர் கணக்கில் பணம் இருந்தால் தானே அவர் கொடுக்கும் காசோலைக்கு மரியாதை? அதே போல்தான் ஒவ்வொரு நாடும் தனது இறக்குமதிகளுக்குப் பணம் தர கணிசமான அந்நியச் செலாவணி கையிருப்பு வைத்திருக்க வேண்டும்.

இறக்குமதி செய்யாமல் எந்த நாடும் இருக்க முடியாது. நாம் கச்சா எண்ணெய், ரசாயன உரம், சமையல் எண்ணெய், கனரக இயந்திரங்கள், எஃகு போன்வற்றை இறக்குமதி செய்கிறோம். இவை இல்லாவிட்டால் தேசம் முன்னேறாது. எனவே இவை அத்தியாவசிய இறக்குமதிகள். இவற்றை இறக்குமதி செய்ய நாம் டாலர், அல்லது பவுண்டில் பணம் தர வேண்டும். இதற்கு நாம் ஏற்றுமதி மூலம் டாலர்களையும், யென்களையும், பவுண்டு (ஸ்டெர்லிங்) களையும் சம்பாதித்தாக வேண்டும். தோல், ரெடிமேட் ஆடைகள், இரும்பு - மாங்கனீஸ் கனிமங்கள், டீ, காப்பிக் கொட்டை, சணல், போன்றவற்றை ஏற்றுமதி செய்கிறோம். இங்கு வரும் டூரிஸ்டுகள் மூலமும் டாலர்கள் சம்பாதிக்கிறோம்.




நமது ஏற்றுமதி, இறக்குமதியின் மதிப்புக்கு இணையாக இருந்தால் பிரச்னை ஏதும் இல்லை. ஆனால் பல காலமாகவே நமது இறக்குமதி, ஏற்றுமதியை விட பல மடங்கு அதிக மதிப்புடையதாக இருந்து வந்திருக்கிறது. இதனால் சர்வதேச நிதி நிறுவனத்திடமிருந்தும் இந்தியாவுக்கு உதவ விரும்பும் நாடுகளிடமிருந்தும் அவ்வப்போது கடன் வாங்கிச் சமாளிப்பது நமக்கு வாடிக்கையாகி விட்டது.

கணக்குப் பார்க்கப் போனால் இன்று நமது மொத்த அந்நியக் கடன் 60 பிலியன் டாலர்கள் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. (ஒரு பிலியன் என்பது ஆயிரம் மிலியன் ஆகும்.)

கடன் வாங்கினால் அதைத் தவணை முறையில் திருப்பித் தர வேண்டும் - வட்டியோடு சேர்த்துத்தான். இந்தத் தவணைக் கடன்களைக் குறித்த காலத்தில் திருப்பித் தரமுடியாது என்ற நிலை ஏற்பட்ட போது தான் நமது தங்கத்தை அடகு வைத்து 200 மிலியன் டாலர் கடன் வாங்கினோம். அதாவது கடன் தவணையைத் திருப்பித் தரக் கடன் வாங்கினோம்.

இந்தப் பரிதாப நிலைக்குப் பிறகு நமது அரசு பல நடவடிக்கைகளை எடுத்துள்ளது. இதன் மூலம் பொருளாதாரம் அபிவிருத்தி அடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. சர்வதேச நிதி நிறுவனமும் நம் உதவிக்கு வந்து, சில அவசரக் கடன்களை வழங்கி, ஓர் இக்கட்டான நிலையிலிருந்து நம்மை மீட்டிருக்கிறது.

நிகர விளைவு என்னவெனில் இப்போது நமது அந்நியச் செலாவணி கையிருப்பு மூன்று பிலியன் டாலர்கள். அதாவது இறக்குமதிக்குப் பட்டுவாடா செய்ய இந்த அளவுக்கு அந்நியச் செலாவணி கைவசம் உள்ளது. ஆனால் இதுவும் கடன் வாங்கப் பட்ட பணம்தான் என்பதை மறக்கக் கூடாது. பெரு முயற்சி செய்து நமது ஏற்றுமதியை அதிகரித்தாலொழிய, மறுபடி மறுபடி நெருக்கடி ஏற்பட்டு, மீண்டும் மீண்டும் கடன் வாங்க நேரிடும்.

இந்தக் கஷ்டங்களையெல்லாம் இன்றுள்ள அரசு உணர்ந்திருக்கிறது என்பதே பெரிய ஆறுதல். நிலைமை எவ்வளவு ஆபத்தானது என்பதை அரசு உணர்ந்திருப்பதால், அந்த ஆபத்திலிருந்து தப்ப வழி வகைகளையும் யோசித்து மேற்கொள்ளும் என்று நம்பலாம்.

- வி. கோபாலன்

# பாலையாவைச் சமாளிப்பது எப்படி?

கதை... கதை... நகைச்சுவை இழையோடும் அழுத்தமான காதல் கதை... தேடினேன்... தேடினேன்... சிக்கவில்லை!

ஒருநாள் பிற்பகல். நண்பர் கோபுவை ''வா, பீச்சுக்குப் போகலாம்'' என்று அழைத்தேன்.

''இந்த படை' பதைக்கிற வெய்யிலிலா? உனக்கு என்ன ஆச்சு?'' என்று என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார் கோபு.

''பீச்சுக்கு நான் காற்று வாங்கவும் போகலை; வெய்யில் வாங்கவும் போகவில்லை. கதை கிடைக்கணும். கிளம்பு'' என்றேன்.

''சரி, சரி, பங்குதாரர் என்றால் லாபத்தில் பங்கு மட்டுமா? நீ அனுபவிக்கிற கஷ்டத்திலும் பங்கு அனுபவிக்கணும் போல'' என்று முணுமுணுத்துக் கொண்டே புறப்பட்டார் கோபு.

மெரீனா பீச்சை அடைந்து வெய்யில் இல்லாத இடம் தேடினோம். ஒரு மரத்தடி நிழல் கிடைத்தது. ''சினிமான்னா பெரிய ஓட்டல்ல ஏஸி ரூம் போட்டு, சகல செளகரியங்களுடன் கதை எழுதுவாங்க... இப்படியா?'' என்று கிண்டலாக அலுத்துக் கொண்டே மரத்தடியில் அமர்ந்தார் கோபு.

நானும் உட்கார்ந்தேன்; பிறகு எழுந்து நின்று அலைகளைப் பார்த்தேன்; சிகரெட் பற்ற வைத்தேன்; மரத்தைச் சுற்றி வந்தேன்; வானத்தைப் பார்த்தேன்; கீழே புல் தரையை நோக்கினேன்....

இப்படி அரை மணி நேரம் ஓடிய பிறகு, சட்டென்று மனசுக்குள் ஒரு பொறி தட்டியது. அந்தப் பொறியை விசிறி நெருப்பாக்கியபடியே கோபுவுக்குக் கதை கூற ஆரம்பித்தேன்.

''கதை சிக்கிட்டது; வெரி இன்டரஸ்ட்டிங்... மேலே சொல்லு '' என்றார் கோபு. சொல்லிக் கொண்டே போனேன். அவ்வப்போது மறு சிந்தனை, சில மாற்றங்கள், கதை வளர்ந்தது...

மாலையில் பீச்சில் கூட்டம் மொய்க்க ஆரம்பித்த சமயம், நாங்கள் மனசில் கதையைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு சித்ராலயா ஆபீஸுக்குத் திரும்பினோம். உடனே பார்ட்னர்களுக்குச் செய்தி பறக்க, இரவு ஏழு மணிக்கு அத்தனை பேரும் குழுமி விட்டனர்.

மறுபடி கதை சொன்னேன்; இப்போது கதை மெருகேறி பளபளத்துக் கொண்டிருந்தது. நண்பர்கள் எல்லோருக்கும் ரொம்ப சந்தோஷம். உடனடியாகப் படப்பிடிப்பு தொடங்கத் தீர்மானித்தோம்.

**டைரக்டர் ஸ்ரீதர்**

புதிய கதையில் அக்காவும் தங்கையுமாய் இரண்டு பெண்கள். முன்பு இந்த ரோல்களில் (முதல் ஷெட்யூலோடு நிறுத்தப்பட்டு விட்ட 'காதலிக்க நேரமில்லை' படத்தில்) காஞ்சனாவும் நிர்மலாவும் நடித்திருந்தனர். இருவரில் காஞ்சனா



காதலிக்க நேரமில்லை படத்தில் ஒரு காட்சி




❑ பிப்ரவரி மாதத்தில் ஐந்து ஞாயிற்றுக் கிழமைகள் 28 வருடங்களுக்கு ஒருமுறைதான் வருமாம்! போன தடவை வந்தது 1976-ல். அடுத்தது 2004-ம் வருடம்தான்!

- மஞ்சுதேவன்

வின் நடிப்பு எனக்கு முழு திருப்தி அளித்த போதிலும் நிர்மலா நடிப்பில் நான் எதிர் பார்த்த அளவு "மெச்சூரிட்டி" கிடைக்க வில்லை. எனவே அவரை ஒதுக்கி, வேறு ஒருவரை 'புக்' பண்ண நினைத்தேன். யாரைப் போடுவது என்று யோசித்த போது தெலுங்கில் நடித்துக் கொண்டிருந்த ராஜ்ஸ்ரீ ஞாபகத்துக்கு வந்தார். அவரிடம் இளமைக் கவர்ச்சியுடன் தேர்ந்த நடிப்பாற்றலும் இருந்தது. அவரையே தங்கை ரோலுக்கு ஒப்பந்தம் செய்து விட்டேன்.

இதனால் நிர்மலாவுக்கு ஏமாற்றம் ஏற்படக் கூடாதே என்ற கவலையும் எனக்கு இருந்தது. எனவே அவரை அழைத்து, "வருத்தப்படாதே, அடுத்த படத்தில் உனக்கு ஏற்ற ஒரு காரெக்டரில் உன்னை அறிமுகப்படுத்தறேன்" என்று கூறி மேலும் விளக்கினேன் :

"ஒரு புதுமுகம் அறிமுகமாகும் போது, அந்தப் படம் வெற்றி பெற்றால் தான் அந்தப் புதுமுகத்துக்கும் நல்லது. எதிர்காலம் நல்லபடி அமையும். மாறாகப் படம் தோல்வி கண்டால், புது முகத்தின் எதிர்காலமும் கேள்விக்குறியாகி விடும்! எனவே, உனக்கு ஏற்ற மாதிரி நல்ல கேரக்டர் அமைய வேண்டும். இன்னொன்று, உன்னிடம் நான் எதிர்பார்க்கும் 'மெச்சூரிட்டி' உனக்கு வர வேண்டும். அதற்காக நீ தொடர்ந்து ஷூட்டிங்குகளுக்கு வா. என் டைரக்ஷனைக் கவனி. ஒவ்வொருவரும் எப்படி நடிக்கிறார்கள் என்று பார். இது ஒரு அனுபவ பாடமாக அமைவதோடு, உன்னுடைய காமிரா கூச்சத்தையும் பயத்தையும் போக்கும். இயல்பான நடிப்பு உன் வசப்படும். அது வரை நீ தொடர்ந்து சித்ராலயாவில் மாதச் சம்பளம் பெற்று வரலாம்..."

நிர்மலாவுக்கு முதலில் சற்று ஏமாற்றமாகத்தான் இருந்திருக்கும். ஆனாலும் நான் விளக்கிச் சொன்ன பிறகு அவர் நம்பிக்கையுடனும் மகிழ்ச்சியுடனும் என் கருத்துக்களை ஏற்றுக் கொண்டார்.

**பா**லையாவின் தீவிர விசிறி நான். அவர் நடிப்பைப் பார்க்கும்போதெல்லாம், 'இவருக்கு ஏற்ற மாதிரி ஒரு கதாபாத்திரத்தை உருவாக்கி, இவரை நம் படத்தில் நடிக்கச் செய்ய வேண்டும்' என்ற ஆர்வம் என்னுள் எழும். "காதலிக்க நேரமில்லை" படத்தில் என் ஆசை நிறைவேறும் வாய்ப்பு இருந்தது. பாலையாவிடம் கதையையும் அவர் ஏற்க வேண்டிய பாத்திரத்தின் தன்மையையும் விளக்கிச் சொன்னதும் அவரும் சந்தோஷமாக நடித்துக் கொடுக்க ஒப்புக் கொண்டார்.

ஆனால் இன்னும் ஒரு சிக்கல் பாலையா விஷயத்தில் இருந்தது. அவருக்கு ரேஸுக்குப் போகும் பழக்கம் உண்டு. ரேஸ் நாட்களில் ஷூட்டிங்குக்கு "டிமிக்கி" கொடுத்து விடுவார்! சனி, ஞாயிறுகளில் ரேஸ் நடப்பதால் ஷூட்டிங்குக்கு வரவே ஒப்புக் கொள்ள மாட்டார்!

நான் தயக்கத்தை உதறி விட்டு பட்டென்று விஷயத்தை உடைத்தே கேட்டு விட்டேன்: "நீங்க நடிக்க சம்மதித்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம். ஆனா, ரேஸ் நாட்களில் ஷூட்டிங்குக்கு வர மாட்டீங்கன்னு கேள்விப்பட்டேன்..."

"ஆமாம்" என்றார் பாலையா. அவரும் தயக்கமின்றியே பேசினார் : "ஷூட்டிங் நாட்களில் ஷூட்டிங் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவுக்கு ரேஸ் நாட்களில் ரேஸும் எனக்கு முக்கியம்! மனசைக் கிண்டியில் வைத்துக் கொண்டு என்னால் கோடம்பாக்கத்தில் கேமிரா முன் நடிக்க முடியாது! அதனால்தான் ரேஸ் நாட்களில் நான் ஸ்டூடியோ பக்கமே போவதில்லை!"

பாலையா என் நெருங்கிய நண்பரும் அல்ல; என்னை விட வயதில் குறைந்தவரும் அல்ல. அவ்வாறிருக்க அவரிடம் உரிமை எடுத்துக் கொண்டு அறிவுரை வழங்க முடியுமா? அல்லது கண்டிப்புத் தான் காட்ட முடியுமா?

தனித் தன்மை வாய்ந்த தமது நடிப்பாற்றலால் என்னைக் கவர்ந்த பாலையாவை 'புக்' பண்ணாமலே விட மனசில்லை. 'புக்' பண்ணி விட்டு அவர் வசதிக்கேற்ப ஷூட்டிங் நாட்களை அட்ஜஸ்ட் செய்வது என்பது என் தன்மானத்துக்கு உகந்த காரியமாக இல்லை.

என்ன செய்வது? யோசித்தேன்.

என்ன முடிவெடுத்தேன்? ஊகித்து வையுங்கள். அடுத்த வாரம் ஒப்பு நோக்கலாம்!

புகைப்படம் உதவி : **பிலிம் நியூஸ் ஆனந்தன்**

**கல்கத்தா கடிதம் :**

# காங்கிரஸ் தேர்தல் - கண்கட்டு வித்தை!

## புத்தக விற்பனை : ரூ. 9 கோடி!

புத்தக வெளியீட்டாளர் சங்கத்தின் புத்தக விழா ஜனவரி 29 முதல் பிப்வரி 9 ம் தேதி வரை நடந்துள்ளது. 1975 ல் 37 ஸ்டால்களுடன் தொடங்கிய இந்த விழா இன்று இத்தகைய பிரும்மாண்டமான புத்தக விழா உலகில் வேறெங்கும் நடப்பதில்லை என்னுமளவுக்குப் பெயர் பெற்றுள்ளது. சென்ற ஆண்டு இந்த விழாவில் மொத்த விற்பனை ஒன்பது கோடி ரூபாய். இந்த ஆண்டு சுமார் 300 ஸ்டால்கள் இருந்தன. விழாவுக்கு வருகை தந்தவர்கள் சுமார் 8 லட்சம் பேர். மொத்த விற்பனை பற்றி விவரங்கள் இடைக்கவில்லை; எப்படியும் சென்ற ஆண்டின் விற்பனையை விட அதிகமாயிருக்கும்.


முயன்று பார்க்கிறார்


நியமனம் கோருகிறார்

## தேர்தல் நாடகம் :

கடந்த மூன்று நான்கு மாதங்களாக நாடெங்கும் காங்கிரஸ் தேர்தலுக்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. ஆனால் மாநிலத்துக்கு மாநிலம் நடைபெறும் கோஷ்டிப் பூசல்களைப் பார்த்தால் தேர்தல் நடைபெறுமா என்பது கடைசிவரையில் கேள்விக்குறிதான்.

கோஷ்டிப் பூசலைப் பொறுத்தவரையில் மேற்கு வங்கம் தமிழ் நாட்டுக்குச் சற்றும் குறைந்ததல்ல. இதைக் கருத்தில் கொண்டு தானோ என்னவோ நமது மூப்பனார் மேற்கு வங்கக் காங்கிரஸ் தேர்தலுக்குப் பார்வையாளராக நியமிக்கப்பட்டிருக்கிறார்! அவருடைய உதவியாளர் கே.டி. ராமச்சந்திரன். இருவரும் பலமுறை கல்கத்தாவுக்கு வந்து போய் விட்டார்கள். நேரடித் தேர்தலா, அல்லது பேச்சு வார்த்தை முறையில் தலைவர் நியமனமா என்பது இதுவரை முடிவாகவில்லை.' பேச்சு வார்த்தை மூலம் தலைவராகத் தயாராயிருக்கிறார் பிரணாப் முகர்ஜி. கனிகான் செளதுரியின் ஆதரவாளர்கள் நேரடித் தேர்தல் கோருகிறார்கள்.

மாநிலக் காங்கிரஸ் தலைவர் சித்தார்த்த சங்கர் ராய் 'இந்தப் பிடுங்கலே வேண்டாம்' என்று நினைக்கிறார் போலும். அவர் வெகு நாட்களாகக் கல்கத்தாவிலேயே இல்லை. 'அம்போ' என்று விடப்பட்ட அவரது ஆதரவாளர்கள் பல்லைக் கடிக்கிறார்கள்.

## பெண்களுக்குக் கொடுமை :

மால்டா மாவட்டத்தில் பீகார் எல்லைக்கருகிலுள்ள புட்னிசர் என்ற இடத்தில் ஜனவரி 24 ம் தேதி பெண்கள் கற்பழிக்கப்பட்ட செய்தி பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியுள்ளது. வழக்கம் போல் இந்த நிகழ்ச்சியிலும் ஆதாயம் தேட முனைந்துள்ளன அரசியல் கட்சிகள். இது பற்றி நீதி விசாரணை கோருகிறது காங்கிரஸ். மாநில அரசில் பங்கு பெற்றுள்ள சில கட்சிகளும் இந்தக் கோரிக்கையை ஆதரிக்கின்றன. இந்த இயக்கத்துக்குக் காங்கிரஸ் தலைவி மமதா பானர்ஜி தலைமை வகிக்கிறார். ஆனால் மால்டா மாவட்டக்காரரும் காங்கிரஸ் தலைவருமான கனிகான் செளதுரி ''நீதி விசாரணை அவசியமில்லை. இது பீகாரிலிருந்து எல்லை கடந்து வந்த போக்கிரிகளின் வேலை'' என்று சொல்லி விட்டார்.


தேர்தல் வேண்டுகிறார்


''பிடுங்கலே வேண்டாம்!''

## ஹெளராவில் பஞ்சாப் தீவிரவாதிகள்?

பிப்ரவரி முதல் வாரத்தில் ஹெளரா நகரின் நான்கு ஓட்டல்களிலிருந்து 28 பஞ்சாபி இளைஞர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். இவர்களிடம் ருமேனிய விமானத்தில் சைப்ரஸ் போக 11 டிக்கட்டுகளும் 50,000 ரூபாயும், 3000 டாலர்களும் இருந்தன. இது சம்பந்தமாக டில்லியைச் சேர்ந்த டிராவல் ஏஜண்டு ஒருவர் கைதாகியிருக்கிறார். இவர்களுக்கு பஞ்சாப் தீவிரவாதிகளுடன் தொடர்பு உண்டா என்பது விசாரிக்கப்பட்டுவருகிறது.

- எஸ். கே. எம்.

# டிப்ஸ்... டிப்ஸ்... டிப்ஸ்... டிப்ஸ்... டிப்ஸ்...

## சிறந்த குடும்பத் தலைவனாய் விளங்க...



● பொருளீட்டும் நேரம் போக மிஞ்சும் நேரத்தில் ஒரு பகுதியைக் குடும்ப உறுப்பினர்களுடன் செலவிட்டு பாசப் பிணைப்பை வளர்த்துக் கொள்ளுங்கள்.

● புதிதாக ஒரு காரியத்தை ஆரம்பிக்கும் முன்னர் குடும்பத்தினரைக் கலந்து ஆலோசியுங்கள். மனம் விட்டுப் பேசச் சொல்லுங்கள்.

● குடும்பத்தினர் அனைவருக்கும் அவரவர் வயதுக்கேற்ப பொறுப்புக்களைப் பகிர்ந்தளித்து, தன்னம்பிக்கை வளரச் செய்யுங்கள்.

● குடும்பத்தினரின் சிறு சிறு வெற்றி களைத் தட்டிக் கொடுங்கள்.

● நல்ல பழக்க வழக்கங்களைக் கையாண்டு பிறருக்கு முன்மாதிரியாக விளங்குங்கள்.

- வேலூர், பத்மா பிரபு.

### வாங்கும் பொருள் மன நிறைவளிக்க....

● பட்டியல் தயாரித்து, மறுமுறை பரிசீலித்து, தேவையற்றதை அகற்றலாம்.

● ஒரே கடையில் தொடர்ந்து வாங்கு வது நலம்.

● பொருட்களின் உற்பத்தி மற்றும் காலாவதி தேதிகளைக் கவனியுங்கள்.

● காப்பித்தூள், சோப்புப் பவுடர் போன்றவை "ரீஃபில் பாக்கில்" கிடைக்கின்றன. பாட்டிலில் வாங்குவதை விட மலிவு. பழைய பாட்டிலில் நிரப்பிக் கொள்ளலாம்.

● பில்லைச் சரிபார்க்காமல் பணத்தை எண்ணிக் கொடுக்காதீர்கள்.

● பொருட்களின் தரம், விலை பற்றி நண்பர்களிடம் அவ்வப்போது கலந்து பேசினால் நல்லது. ஏமாற்றம் தவிர்க்கலாம்.

- ஷைலஜா மனோஹரன், சென்னை - 11.

### துணிகள் கறை நீங்கிப் பளிச்சிட....

● வெது வெதுப்பான நீரில் ஊற வைக்க, கோந்துக் கறை நீங்கும்.

● பழக்கறை, ஐஸ்கிரீம், இங்க் கறைகள் மறைய எலுமிச்சம்பழச் சாறு உதவும்.

● எண்ணெய், கிரீஸ் கறைகள் போக மண்ணெண்ணெய் உபயோகிக்கலாம்.

● பெயிண்ட் வார்னிஷ் கறைகள் டர்பன்டைனுக்கு அஞ்சி விலகும்.

● தக்காளி சாறு, பூட் பாலிஷ் கறைகள் நீங்க கிளிஸரின் தடவி அரைமணி சென்று சோப்புப் போட்டுத் துவைக்கலாம்.

● இரும்புத் துரு ஏறிய துணி களில் அங்கு உப்பு தூவி, எலுமிச்சை சாறு தடவி, காய வைத்து அலசவும்.

- குன்னூர், ஜென்ரோச்



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ.300/' அல்லது 500/' ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/' அல்லது 5000/' மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த
தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,
D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

****** இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு ******

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I
1. ரிக்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 10 மண்டலங்கள் - ரூ. 265/-
2. யஜுர்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 7 காண்டங்கள் - ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - கிரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 185/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 65/-
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - கிரந்தாக்ஷரம் - ரூ. 80/-

II கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்
1. போதாயன பூரவாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 65/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

III
1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருதமூலம் - தமிழ் பதவுரை)
3. நளோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வடமொழிச் சொற்கடல் - ஸம்ஸ்க்ருதம் - தமிழ் Dictionary ரூ. 80/-
5. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத்தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம்.

பிரஸிடெண்ட் & டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. சமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர்காலனி, கும்பகோணம் - 612 001.

நேரில் வாங்க விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும் ராஜா வேத காவ்ய பாடசாலை, யாகசாலை தெரு (சர்க்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001.

# ஓட்டம்பிடிக்க வைக்காத ஓட்டல் சமையலறை!

ஒரு சராசரி ஹோட்டல் சமையலறைக்குள் நுழைந்து பார்க்க நேர்ந்தால் சாப்பிடும் ஆசையே போய் ஓடி விடத் தோன்றும்!

''இந்த நிலை மாற வேண்டும். சாப்பிட வரும் வாடிக்கையாளர்களின் நேரடிப் பார்வையில் உணவு தயாரிக்க வேண்டும்'' என்று எண்ணினார் வெங்கட்ராமன். தம் எண்ணத்துக்குச் செயல் வடிவம் கொடுக்க, சென்னை சி.பி. ராமசாமி ரோட்டில் 'கார்னிவல்' என்ற ஹோட்டலை ஆரம்பித்தார்.

உணவு வகைகள் சமைக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டே சாப்பிடும் நூதன அனுபவத்துக்காகவே பலர் 'கார்னிவல்'ஐத் தேடி வர ஆரம்பித்தார்கள்.

''கூடவே, சுத்தமான சூழ்நிலையில் சுகாதாரமான முறையில், உணவு தயாராகிறது என்ற மனச் சாந்தியும் கிடைக்கிறதல்லவா'' என்கிறார் 'கார்னிவல்' மேலாளர் ராஜ்குமார்.

கார்னிவலின் 900 சதுரடி சமையலறைக்குக் கண்ணாடி சுவர்கள். அதன் வழியே காண்டினெண்டல், சைனீஸ், தந்தூரி, இந்திய உணவு வகைகள் தயாராவதைப் பார்க்கலாம். ஒவ்வொரு வகைக்கும் தனித் தனி அடுப்புகள், உபகரணங்கள். விரும்பினால் கண்ணாடிச் சமையலறையின் உள்ளேயும் சென்று பார்க்கலாம்.

''கண்ணாடி அறைக்குள் கொதிக்கும் சூட்டில் நின்றுகொண்டு எப்படி வேலை செய்கிறார்கள்?''

''அதற்குத்தான் இரண்டு லட்ச ரூபாய் செலவில், வெப்பம் வெளியேற்றும் எக்ஸாஸ்ட் சிஸ்டம் அமைத்துள்ளோம். அடுப்புகளுக்கு மேல் உள்ள புகை போக்கி போன்ற அமைப்பின் வழியாக வெப்பத்தை உறிஞ்சி, கட்டடத்தின் ஆறு மாடிகளுக்கு மேல் எடுத்துச் சென்று வெளியேற்ற ஒரு எட்டு ஹார்ஸ் பவர் மோட்டார் இயங்குகிறது'' என்று விளக்குகிறார் ராஜ்குமார்.

''எல்லாவற்றுக்கும் மேலாக, பழக்கம் என்று ஒன்று உண்டல்லவா?'' என்று புன்னகையுடன் கூறுகிறார் பாண்டியன்.

அகன்ற வாயுடன் கனன்று கொண்டிருக்கும் தந்தூரி அடுப்புக்குள் அனாயாசமாகக் கைவிட்டு, அதன் உட்புறச் சுவர்களில் ரொட்டியைச் 'சபக் சபக்' என்று தட்டி வாட்டியெடுக்கும் காட்சியைக் காணும் போது, பழக்கத்தின் வலிமை புரிகிறது.

- நிர்மலா சக்ரவர்த்தி

படம் : யோகா

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka




"ஃப்ரெஷ்டேஸ் என் அன்றாடப் பழக்கங்களில் ஒன்றாகிவிட்டது. ஆபீஸிலும் சரி, சதா மீட்டிங்னு அலையும்போதும் சரி, நான் எத்தனை புத்துணர்ச்சியுடனும், தன்னம்பிக்கையுடனும் இருக்கேன் தெரியுமா..."

*"ஒரு பேன்டீ லைனர் இத்தனை சௌகரியம் தருகிறதா?"*

"நிச்சயமா. இது ஈரக்கசிவையெல்லாம் உறிஞ்சிக் கொண்டு விடுகிறது. வெள்ளைபடுவதுகூட எனக்குத் தெரிவதே இல்லை! அட! டியோடரண்ட்பற்றி சொல்ல மறந்துட்டேன்!"

*"டியோடரண்டா! இன்னும் என்னென்ன இருக்கு?"*

இது ரொம்ப சின்னதா, மெல்லிசா இருக்கறதால், அணிந்திருக்கும் உணர்வே தெரியாது. கைவசம் என் ஹேண்ட்பேகில் எப்பவுமே ஒண்ணு இருக்கும். சில சமயம் ஆபீஸ் விட்டதும் அப்படியே சிலரைப் போய் பார்க்க வேண்டியிருக்கும். பேன்டீஸை மாற்ற முடியாது. அப்ப இது எவ்வளவு சௌகரியம் தெரியுமா?"

*"சரி, சரி! நான் ஒப்புக்கறேன்."*




**ஃப்ரெஷ்டேஸ் பேன்டீ லைனர்... எப்போதும் புத்தம்புதிய பேன்டீ அணிந்திருக்கும் உணர்வு.**

வேலை செய்யும் போது, பயணத்தின் போது, உடற்பயிற்சியின் போது, கர்ப்பமாக இருக்கும் போதும்.

**ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன்**

Freshdays is a TM of J&J, U.S.A.

everest/91/JJ/284 tm